ஓம் பரப்பிரம்மணேநம:

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கி, ஆநந்தத்தைத் தரவல்லதான அநுபவ விநோத ஞான கலா விலாஸங்கள் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம் - எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

" எண்ணிய எண்ணியாங் கெய்துப ; எண்ணியார்
COPY RIGHT] திண்ணிய ராகப் பெறின். " (திருக்குறள்.) [64-பக்கங்கள்.

கமலம்-4. Vol. 4. | சென்னை: சுக்கிலஞு தைமீ 1உ 1930-ம்ஞு ஜனவரிமீ 15உ | இதழ்-46. No. 46.




"உள்ளது போகாது இல்லது வாராது" என்பதே பிரமாணம். ஒன்றினிடத்தில்லாத ஒன்று நவீனமாய் வெளிப்படுதல் சார்பாகாது. விருக்ஷ ஆகாரம் வித்தினிடத்துச் சக்திரூபமாய் வொடுங்கி யொளித்தும், வித்தினிடத் தொளித்த சக்தி பிறபட்டு விருக்ஷாகாரமாய்ப் பரிணமிப்படைந்ததும் சூக்ஷ்ம அறிவுடையாரே காண்பர். சுக்ல—சுரோணித சையோகத்தால் நேர்ந்த அணுப்புழுக் குழாம் தினே தினே பக்குவப்பட்டுப் பூரித்துப் பாரித்துப் பிண்டமாய் வெளிப்போந்ததைக் கண்டீர்! அவ்வணுப் புழுக் குழாத்தை உயிர்ச்சாத்திர பண்டிதர் பரீக்ஷிக்குங்கால், இன்னவை குரங்காய் வளரும், இன்னவை நாயா யொழியும், இன்னவை நரியா யூளையிடும், இன்னவை கழுதையாய் முடியும், இன்னவை நாளுய் ஓங்கும், இன்னவை மகா ஞானியின் புண்யதேகமாய் நீளும்—என்று சித்தாந்தம் செய்ய முடியாதென்று கூறினர்! யாரறிவார் போறிவை? ஹே ஸர்வேஸ்வரா! ஹே தயாளு! பூமியிலூறும் புழுக்களாம் யாங்களோ அறிவோம் நமது திருவுள்ளம்! ஆதிபகவ! நமதாற்றலை எண்ணுந்தோறும், எண்ணுந்தோறும் உள்ளம் நடுங்குமே! பிருந்தாவனத்துக் கோபிகைகளிடமாகக் கண்ணன் நடாத்திய லீலையை அன்பிலாப்

---

பொய்யையே கண்டு, பொய்யையே விண்டு, பொய்யையே யுண்டு, பொய்யிற் பூரித்துப் பொய்யிற் பாரித்துப் பொய்யைக் கொட்டிப் பொய்யைத் தலைகட்டிப் பொய்யை வாரிப் பொய்யை வழங்கிப் பொய்யாய்க் கிடந்த பல்லோரை ஸ்வப்ந மொழித்துச் சாந்தமடைவித்து மெய்யை யூட்டி, மெய்யே யாக்கி, மெய்வாழ்வு அடைவித்த மெய்யான ஞானசந்திரிகை எது?—அது இற்றைநாள் தமிழுலக முழுமையும் இணையிலா - ஞானம் வீசித் திக்விஜயம் செய்யும் தனிச் சுடரொளியான—"அமிர்த குணபோதினி"யே.

**பேதை மாக்களோ** அறியவல்லார்? பக்குவஹீனர்களான ஞான சூன்யர் தெய்விக நூல்கள் விஷயமாய் அவசர புத்தியால் மூர்க்க சித்தாந்தம் செய்யா தடங்குவதே புத்தி யென்பதை இங்கு தெரிவிக்கின்றோம்.

ஃ

**"வேறுபடும் சமயமெலாம் புகுந்து பார்க்கின் விளங்கு பரம்பொரு ளே நின் விளையாட்டலலால் மாறுபடுங் கருத்தில்லை."** தாரஞ் சமீபமாய், யாவுமா யல்லவாய் நின்ற நம்பனை இன்னுயிர்த் தோழனாய்க் கொண்டு அவனது திவ்ய சாந்நித்தியத்தை யடையப்பெற்ற சிறந்த மேதாவியரோ பதினாயிரத்தி லொருவர். உள்ளன்புள்ள மாதரேயென்னச் சரண்யனைத் தம் பிராணபதி யாய்ச் சிந்தித்து அவனது கருணை வடிவைத் தழுவாது தழுவிக் கலந்து சுகித் தோர் லக்ஷத்தி லொருவர். சச்சிதானந்த வருட்பெருங்கடற் படிந்து, தாமொ ழிந்து, சிவானுபூதிச் செல்வராய் விளங்குநர் கோடா கோடியிலொருவர் கண் டீர்! "மணிநகையாரே தெய்வம் வாக்குபதேசங், கொங்கைத் துணைகுருபீடம் பாதத்துணை வருடுவதே பூஜை, அணைவதே முத்தி" எனக் கொண்டார்க்கு அறிவுச்சுடர் யாரே கொளுத்தவல்லார்?

ஃ

**"எம்மதத்தோர் எவ்வகைநிட்டை சொல்லினும் சம்மதமே யெமக்கு."** அது ஈன்ற அன்னை அந்தந்தக் குழந்தைகட்கு அவரவரது இயல்பினுக் கேற்ற தாய் இடும் வெவ்வேறு உணவினைப் போன்றதாம். ஒவ்வொரு மதத்தினது நிட்டையும் அந்த மதமாகிய கொள்கைக்கு ஏற்ற உணவாம். தேனுண்ணும் குழவிக்குத் தேனும், பாலுண்ணுங் குழவிக்குப் பாலும், சோறுண்ணும் மகவுக் குச்சோறும் ஊட்டியுபகரிக்கும் தாயே யறிவாள் தம்மக்கட்குப் பிரயோஜன மாகும் பதார்த்தங்களை. அவ்விதமே அந்தந்த மதத்தின் ஆதிபுருஷர்கள் தம் மதத்தின் வழியே இறைவனைக் கண்டடைவதற்கு இது இது ஆசார வழிபாடு களென உணவினை யமைத்து உதவினவராவர். அன்பே உருவான அன்னை தேகாரோக்யம் பெற்ற தஞ்சிறுவனுக்குச் சிற்றுணவு கொடுத்து, பிணியுற்ற தஞ்சிறுமிக்குக் கசக்கும் மருந்தை யூட்டியது அவளது காருண்யமாகாமல் என்னாங்கொல்? அதுபோன்றே, அவ்வம் மதத்து ஆதிபுருஷர்களும் காருண்ய மேலீட்டினாலேயே தத்தம் மதங்கட்கும் வழி வகை நிஷ்டை இன்னின்ன வாறெனக் கருணையால் விதித்துச் சென்றனரெனக் கொள்க. அவற்றினைப் பழித்தல் மௌடீகமாம்.

ஃ

**"உனது அதிகப் பிரசங்கம் என் சிறு மூளையிலேறாது ஏறாது"** என்ற தாம் கிணற்றுத்தவளை யொன்று. அக்கதை பின்வருமாறு:—பாழுங் கிணறு ஒன்றில் பன்னெடுநாள் உயிர்த்திருந்த தவளை யொன்று ஒரு சிறுபோதும் அக்கிணற்றுலகமன்றி மற்றொன்றை யறியும் ஆற்றலின்றிக் கிடந்ததாக:— அதனை ஸமுத்திரத்துத் தவளையொன்று காண அங்கு விருந்தாய் வந்து சேர்ந் ததாம். அங்ஙனம் வந்த விருந்தினனை நோக்கிக் கிணற்றுத் தவளை துதித்து. உனது இருப்பிடம் யாதோ? யாண்டையதோ? எத்தகைத்தோ? என்ன

---

ஒருவன் இன்னொருவருக்குத் தக்க சமயத்தில் உதவிகளும் உணவும் தந்து உபசரிக்க, அந்த ஒருவரோ உபசரித்தவன் பலநாளும் பசித்துக் கிடக்க மூன்று வேளையும் தன் வயிற்றை நிரப்புகிறார். பசித்தவன் எரிச்சல் விடுமோ?

எழிலமைந்ததேயோ ? என அவசரத்தோடும் உசாவியதாம். சமுத்திரத்துத் தவளை யான் ஸாகரவாசி யென விடையிறுத்து மகிழ்ந்ததாம். நாட்டு வளப்பத்தை யெஞ்ஞான்றும் எட்டுணையும் அறியாது கிடந்த கிணற்றுத்தவளை ஸாகர விசாரணை செய்வானெழுந்து, நீ கூறும் ஸாகரம் யான் வாழப்பெற்ற இப்பெருங் கிணற்றினது அகலம், ஆழம், அழகைப்பெற்ற துண்டோவென அதிவினயத்துடன் அதை மீண்டுங் கேட்டதாம். ஸமுத்திரங்கண்ட தவளை இது கேட்டு இறும்பூதெய்தி, மந்தஹாஸம் தவழ்ந்த நகைப்பைப் பிரகாசப்படுத்தி, யான் வசிக்கும் ஸமுத்திரம் உன்னாலும், என்னாலும், பிறராலும், யாவராலும் இத்துணைச் சிறப்பு வாய்ந்ததெனக் கணிக்கக்கூடாத தொன்றாகுமென்று சமாதானம் கூறியதாம். இதைச் செவியேற்ற சிறுமதியான கிணற்றுத் தவளை ஸமுத்திரத்துத் தவளையினிடம் முற்றும் பிணக்கங்கொண்டு சீ! சீ! நீ கூறலுற்றது முற்றும் நடவாததே; உனது அதிகப் பிரசங்கம் என் சிறு மூளையில் ஏறாது ஏறாது ! உனது கூற்றிற்கும் எனது சிற்றறிவினுக்கும் இரண்டாயிரம் மைல் தூரம். எனது கிணற்றினும் பெரிய பதார்த்த மொன்றிருக்கக் கூடுமென்று ஒருபோதும் நம்பேன்! நம்பேன் ! போ! போ ! நின் ஏழைமதியே நின் கண்ணை மயக்கி மறைத்தது போலும் ! நீ க்ஷணமேனும் என் முன் நில்லாது ஓடியொழிந்திடுக என்று தனது மூடப்பிரசங்கத்தைச் செய்து விருந்தாகவந்த தவளையைத் துரத்தி வெளிப்படுத்திவிட்டுத் தான்மட்டும் வெளிப்படாமல் அக்கிணற்றுச் சுவர்க்கத்திலேயே கிடந்து பின் மாண்டொழிந்ததாம். இதுபோன்றே, ஸம்சாரச் சேற்றில் ஆழ்ந்து இச்சிறு உலகமே பேரின்பமெனக் கொண்ட அறிவிலாதார்க்கு, மேன்பாட்டினையுடைய மேலோர் வேறொரு பெரிய ஆநந்த முக்தி உலகமுண்டென்றும், அதையடையப் பரமனைத் துதித்தல் அவசியமா மென்றும் கூறுஞ் சொற்கள் அச்சிறு மதியினரின் செவியில் ஏறாது வீணாகின்றதாம். அன்னவரும் கிணற்றுத்தவளை போன்று பேறிவு படைக்கத் திறமில்லாது தம் சிற்றறிவிலேயே சிரித்து மகிழ்ந்து மாண்டொழிகின்றனராம்.

ஃ

"நீண்டு நீண்டுத் தூரந்தூரமாகி மறைகின்றார் ஈசன்" என்றாராம் ஓர் முனிவர். இப்புண்ய பூமியை முன்னொரு நாள் ஒரு குடைக்கீழடக்கி யாண்ட செங்கோலேந்திய சக்ரேசுவர னொருவன், அக்காலத்தே பரதகண்டப் பிரதேச முழுமையும் தமது பிரபாவம் உலாவப்பெற்ற சித்தர் ஒருவரைத் தம் சமுகத்திற்கு வரவழைத்து உபசரித்துக் கடவுளைப்பற்றி ஏதேனும் அவர் போதிக்கும்படி வேண்டினான். அப்பெரியரிற் பெரியர், ஒருநாள், இருநாள், நான்குநாள் எட்டுநாள், ஈரெட்டுநாள், நாலெட்டுநாள், எட்டெட்டுநாள் என்று இரட்டித்த எண்ணிக்கையில் அடங்கிய பல நாள் தவணைகள் சொல்லி, முடிவில் கடவுளைப்பற்றிச் சிந்திக்கச் சிந்திக்க அவர் நீண்டு நீண்டுத் தூரந்தூரமாகி மறைவதாகக் கூறினராம். அரசனும் அதன்பின்னர் அறிவு தெளிந்தனனாம்.

ஃ

"பரமேசுவரனை யளந்தறியப் புகுதல் கூடுமோ?" சித்த சுத்தி யடைந்த பெரியவரொருவர் ஒரு காலத்தில் அகிலலோக நாயகனை நோக்கித்

---

சில மனிதர்கள் தாங்கள் அதிக வயதானவர்கள் என்பதினாலேயே எந்தப் பெண்களிடமும் பேசலாமென்று எண்ணுகிறார்கள். அதற்கு இடம்தர வேண்டாம். யோக்கியன் இவ்விதம் தானாகவே வலியப் பேசப் போகான்.

தவங்கிடந்து வெகுநாள் கழிந்தொழிந்தும் பகவான் பிரஸந்நமாகாததை யுணர்ந்து வெறுப்புற்றுத் தேகத்தை யொழித்து உயிர்துறப்பான்கருதி சமுத்திரக்கரையை யடைய, ஆங்குக் கந்தனை நிகர்த்த சுந்தர வடிவினன், சிறு வயதுப் பாலகனொருவன் பால்யலீலை யொன்றனைச் செய்யா நின்றதைப் பார்த்து வியப்படைந்து, அவனை நோக்கி, ஹே! குழந்தாய்! இஃதென்னை நீ செய்யலுற்றது? சமுத்திரத்துச் சலத்தை இச்சிறு பாத்திரத்தில் எடுத்துக் கொண்டுவந்து மணலில் ஊற்றுகின்றனையே; இதனால் நீ அடையும் பயன் யாதோ? என்று உசாவினர். அதற்கு சிறுவன், ஐய! யான் இச்சாகரத்தை வற்றச் செய்வதற்காக இன்னணம் இச்செயல் புரியாநின்றேன் என்றனனும். அதைக்கேட்ட முதியோர் புன்னகை மிகுந்தவராய் "என்ன இது! இச்சமுத்திரத்தை நீயோ ஒழிக்கற்பாலை" என மீண்டும் வினவினர். அதைச் செவியேற்ற சிறுவன், ஐய! யான் செய்யப் புகுந்த காரியம் நீவிர் பரமேசுவரனை யளந்தறியப் புகுந்ததைவிட ஆச்சரியமேயோ வென்று எற்றவிடை யளித்தனனும். பிறகு அச்சிறுவன் மறைந்துவிடவே, பெரியவரும் தன் அறியாமைக்கு இரங்கி மீண்டும் தவம் செய்யச் சென்றனராம். எங்கள் மதத்திற்கு வரின் கடவுளை விரைவினிற் காணலாமென்று அழைக்கும் மத உபதேசிகள் இதனைக் கவனிக்கக்கடவர். கடவுளை யளந்து அறிதல் இயலுமோ? எட்டாப் பரம்பொருளன்றோ அது. பிறசமயத்தவரை மயக்கும் மாயமொழிகளை மத வாதிகள் வழங்குதலிற் பயனென்னும்? எமாற்று வித்தையே அது என்க. "அவாங் மநச கோசர" என்று வேதங்கள் வந்தித்த பெருமானை அன்பாலன்றிப் பிறமதம் புகுந்த அளவிற்றானே யடைதல் சாத்தியமோ கூறீருலகீர்.

ஃ

"பக்திவலையிற் படுவோன் காண்க" என்றெழுந்த அமிர்த வசனம் இருந்தவாறென்னே! இன்ன தன்மைய னென்றறியாப் பெருமான்—எங்கள் பிரான், எமதண்ணல், எங்கள் கண்கண்ட தெய்வம், எங்கள் மெய்கண்ட மூர்த்தம், எம்மனோர் அஹம் ஒழியப் போதித்த குருமணி, கண்ணன், கமலக் கண்ணன், கருமுகில் வண்ணன், கருணையண்ணல், எங்கோன், எம்மான லோக சம்ரக்ஷகன், தீனதயாளு, பார்த்தனுக்குத் தன்னிடமே கைலையைக் காட்டினோன், அவதியுள்ள ஸ்திரீரத்நம் துரோபதைக்கு அபயஹஸ்தம் தந்து ரக்ஷித்தோன், சிஷ்டர்கள் சிஷ்டன், துஷ்டர்கள் துஷ்டன், இஷ்டர்களிஷ்டன், போலிகட்குப் போலி, ஞானிகட்குத் தாரகப்பொருள், அஞ்ஞான விருளையே யபேக்ஷித்து அமைந்து கிடப்பார்க்கு அஞ்ஞான ஆஸ்தியையே யமோகமாய்த் தந்து ஆடல் காணும் நங்கண்மணி, யாவரிடத்தும் துவேஷமொழிந்து, யாவரையும் கண்ணனாகக் காண்போரது ஹிருதயகமலத்தையே கோயிலாகக் கொண்டோன், தன்னையே நிகர்த்தோன், ஞானவள்ளல், கடுகைத் துளைத்துக் கடலையடைத்ததென்னச் சதுர்வேத சாரத்தையும்—உபநிஷத்கோவையையும்—சர்வ சாஸ்திரங்களையும்—உலகிற் பரவியுள்ள சர்வமத முக்கிய சாராம்சங்களையும் ஒவ்வொரு சொற்றொடரினும் ஒவ்வொன்றாக ஒளித்து அமைத்த எங்கள் தயாநிதி——அவன் றனது வசனாம்ருதத்தைச் சிரமேற்கொண்டு வாழ்வோமாக! ஹே! சச்சிதானந்த ஹரீ! எம்மை அல்லற்

---

அவனது அத்தனை திட்டுகளும் சிடுசிடுப்புகளும் அவளுக்கு ஒரு இன்பக் கட்டியாகவே தோற்றுவதேன்?—காதலால்—கருத்தொன்றாகி ஒட்டியதால்.

கடல் படுத்தும் பாழ்வினையை நினது அளவிலா அன்பு சுட்டொழிப்பதாக! நினது திவ்ய மங்கள சாந்நித்யம் யாண்டும் தழைத்தோங்குக! நினது பரலோகப் பெருவாழ்வு எந்த ஜென்மங்களிலேனும் எமக்குச் சொந்தமாகி எம்மையடைக! கண்ணே வருக! கண்ணு வருக! எங்களன்பே வருக! கதியே வருக! தவமே வருக! ஐயா வருக! மெய்யே வருக! அம்மே வருக வருக வருகவே!

ஃ

**"தோன்றின மறையும், மறைந்தன தோன்றும், பிறந்தன இறக்கும் இறந்தன பிறக்கும்"** அடி நுனி எனும் இரண்டில் ஒன்றில்லாது கிடந்த, கொம்பு ஒன்றும் கிடைக்குமேயோ? நுனியுண்டேல் அடியுண்டன்றோ? நுனியும் அடியும் உளதாயின் இடையும் உண்டென்பதிற் றடையுண்டோ? இன்று உயிர்த்த ஜீவன் ஈரெட்டாண்டு முன்னர் எங்கிருந்தனன்? அன்று இலனுகில் இடையிற் றோன்றல் எவ்வாறு? இடையிற்றோன்றி வாழ்வடைந்தவன் இறுதியில் ஒளித்த க்ஷேத்திரம் யாதோ? அன்றிருந்தவன் பிற்றைஞான்று எங்கு ஏகினான்? முன்னில்லாததொன்று இடையில் முளைப்பது யாங்ஙனம்? மறைந்ததினின்றும் தோன்றுகிறது. தோன்றியதினின்றும் மறைகின்றது. இது எம்பெருமானின் திருவிளையாடல் கண்டீர்.

ஃ

**"ஒன்றில்லாது மற்றொன்றில்லை"** அற்புதப் பொருளில்லாக்கால், அற்புதமென்பா னொருவனில்லை. அன்பைச் செலுத்தத்தக்க இடமொன்றறியான் அன்புளனாதலெங்ஙனமோ? அருளைப் பெறும் பதார்த்தமொன்றில்லாக்கால் அருளுடையோ னொருவனிருத்தலும் பொய் பொய்யேயாம். வனிதையைத் தழுவாது இல்வாழ்வு அடைவாருண்டோ? புமானைச் சேராது கருவுற்றுப் புன்முறுவல் பூத்தாளுண்டேயோ? எனவே, கடவுள் ஒருவர் இருக்க, அவர் வழியினதாய், அவர் படைப்பாய், அவர் அமைப்பாய் உலகமும் பிறவும் தோன்றியதெனக் கொள்க.

ஃ

**"கொள்ளித் தேள் கொட்டுண்டு குதித்தாடும் கள்ளுண்ட கள்ளமனக் குரங்கு"** மனம் அடைந்துள்ள அபார செயல்களை யாவரறியப் போகின்றார்? அகண்டாகார விர்த்திபடைத்த ஆகாசப் பூதத்தைக்கூட விழுங்கி யேப்பமிட்டுக் கிடக்கும் அது. அதை யறிய, அதை வெல்ல, அதை யடக்க, அதை வசப்படுத்த அதைச் சித்தாய் மாற்ற எவரால் முடியும்? குழவியறிவுற்றார் பலர்—குமரவறிவு கொண்டார் சிலர்-முதிர்ந்தவறிவை யடைந்தார் வெகு சிலர். இது அவரவர் மனோபக்குவத் தளவினதாகும். மனம் எங்கு உளதோ அங்கு ஆணவம் குடிகொண்டுளதாம். ஆணவம் இச்சையை வளர்ப்பதாகும். இச்சை முக்கியமாய்ப் பயத்தையும் இதர துக்கங்களையும் விருத்திசெய்யாதுவிடுமோ? **பயமொழிந்து வாழ்வதே வாழ்வு.** அதற்கு மனம் அடங்குதல் வேண்டும். இந்த இடம் என்றபோதே அந்த இடம் முழுமையும் ஒரு நொடியில் மனம் வியாபித்துவிடுமே! கல்கத்தாவைக் கண்டுவந்த கண்கள் சென்னையின் ஒரு

---

மதியிலா விசும்பும், செவ்வி மணமிலா மலரும், தண்ணீர் நதியில்லா நாடும், செம்பொன் நரம்பிலா நாதயாழும், நிதியிலா வாழ்வும், தக்க நிலையிலா நெஞ்சும் கொண்டு பயனென்?

மூலையிலொதுங்கி நிற்பவும், கல்கத்தா வென்ற மாத்திரத்தானே, ஆண்டுள்ள பகீரதி நதிப் பிரவாகத்தையும், சுபிரீம் கோர்ட்டு, தந்தியாபீசு, தபாலாபீசு, முதலியனவாய யாவற்றையும் கண்டு களித்து நினைவூட்டுகிற மனக்கண்ணினது மஹா வேகத்தின் மாட்சியை என்னென்போம்! இம் மனத்தை உண்மை ஞானங்கண்டவரே அடக்கியாளும் திறமையினராவர். அவர் நிலை யாதோ வெனில், "சேய் போலிருப்பர் கண்டீர் உண்மைஞானந் தேளிந்தவரே" என்ற அமுதவசனத்தால் அறிந்திடுக.

"நின்றவார் பிறரன்றி நீயே யானாய்
நினைப்பார்கண் மனத்துக்கோர் வித்துமானாய்
மன்னானாய் மன்னவர்க்கோ ரமுத மானாய்
மறை நான்கு மானாயா றங்கமானாய்
பொன்னானாய் மணியானாய் போக மானாய்
பூமிமேற் புகழ்தக்க பொருளே யுன்னை
யென்னானா யென்னானா யென்னி னல்லா
லேழையேன் என்சோல்லி யேத்து கேனே."



## விலைமடந்தையர் மயக்கில் விழுவார் விழித்தெழுவதேது?



ஜாஜ்வல்லியமாய்ப் பிரகாசியா நின்ற நவமணிக்குவியல்கள் டால்வீச ஆபரணாலங்கிருதை யாகி, வெண்பட்டுக் கவுன் (Gown) சிறக்க, விண்பட்டுக் காசிச்சரிகைச் சாரி யொன்றுடுத்தும், பழமையும் புதுமையும் பொருந்தியுறவாடி நகையாடற் கடையாளமென மத்தாப்புச்சரிகை ரவிக்கை தரித்தும், அதனோடு மக்மற்பெட்டிக்கோட்டு (Petty Coat) கொண்டு தனது ஸ்வர்ண மேனியை மறைத்தும், இடையுண்டென உத்தேசிப்பதற்கு உபகாரமாய்க் கிடந்த தங்க வைர இடையாபரண மொன்று இடையிற் பிரகாசிக்கவும், பூரணச் சந்திரனைப் பழித்துப் பொலிவெய்திய திருமுகத்துடன் இடையொடிய நடை குலுக்கி, முகமினுக்கிக் கண்ணம்பெய்து வல்லுயிர், வாட்டி, ஒய்யலாய் மையல் ஊட்டி முனீஸ்வரரையும் நொடியில் வெல்லும் விலைமடந்தையர் தம் மயக்கில் விழுவார் விழித்தெழுவதேது? வரிசை வரிசை யாகவே வட்டியும் முதலுமாய் ரோகங்கள் வரவும் தவறாது.

பழகித் தெரிந்த ஒருவர் கண்டும் காணாததுபோற் செல்வாராகில், நீயும் அவரைப் பார்க்காததுபோல் நடந்துவிடுக. வலியச்சென்று ஏன் பேச? அவரிலும் நீ தாழ்ந்தவனில்லை. அலக்ஷியமாய் அதை உதறி விலகிவிடுக.

# அமிர்தகுணபோதினி

சுக்கிலஹூ தைமீ 1உ


## ஏமாறுவதில் ஏற்படும் சக்தி.



**வனுடன்** ஒன்றுக்கு எதிர்பார்த்து விழி பூத்து ஏமாறிடுங்காலை, ஏக்கம் மிஞ்சிய அந்நேரத்தில் ஊக்கம் புகட்ட சட்டென்று எதிர்படுகின்றது—ஓர் அரிய சக்தி! சில சமயங்களில் இந்த சக்தி பிறப்பட்டு வருவதுமுண்டு. ஏமாற்றியவனை ஏமாற்ற ஏற்றதோர் யோசனையை அந்த சக்தி காட்டுகின்றது. ஏமாற்றத்தை மற்றொரு வகையில் சமனம் செய்துகொள்ளச் சரியான மார்க்கத்தையும் அது தெரிவிக்கின்றது. ஏமாறியதும் அது ஒரு பெரிய அநுபவந்தானென்று அது சொல்லுகின்றது. அந்த அநுபவத்திலிருந்து வேண்டிய புத்திமதிகளைத் தெரிந்து கொள்ள வைக்கின்றது. ஏமாற்றத்தின் பயனாக அறிவிலே போதிய வெளிச்சமுண்டாகின்றது. நம்பிக் கெட்டுவிட்ட பேதமையை எடுத்து இடித்துணர்த்தி, இனிமேல் செய்யவிருக்கும் காரியங்களின் வகை இன்னின்னவாறென்று விவரித்து வழி தெரிவிக்கின்றது. ஒடிந்து சாய்ந்துவிட்டவனது உள்ளத்தைத் திடப்படுத்தித் தேற்றி ஒரு புதுப் பாதையில் அவனை நடத்திச் செலுத்துவதும் இந்த சக்தியே. களைத்து விழுந்தவனை ஜிவ்வென்று எழுந்திருக்க வைப்பதும் இந்த சக்தியே. ஆதியிற்கொண்ட ஒரு ஆசையை இன்னும் வைத்துக்கொண்டு உயிர்வாழச் செய்வதும் இந்த சக்திதான். ஏமாறியவனைத் தேற்றுவிக்கும் வன்மைகொண்ட இந்த சக்தி ஒன்று மட்டும் இல்லாதிருப்பின் இவ்வுலகம் வெகு தத்தளித்துப் போயிருக்கும்.

ஃ

சக்தி தனித்ததாக இருப்பதில்லை. எவ்விதம் சுவை யென்பது தனியாக இன்றி, ஒரு வஸ்துவுடன் கலந்ததாக நின்று அதனோடு வெளிப்படுகின்றதோ, அவ்விதமே ஒரு ஸம்பவத்தைப் பின்பற்றி அதனுடன் தொடர்ந்தே அது உதயமாகிறது. ஏமாற்றத்தினது

---

கண்டும் காணாததுபோல் முன்னொருகால் சென்றவன் தன் காரியத்தின் நிமித்தம் உன்னிடம் வருவதும் கூடும். அப்பொழுது நீயும் அவனைப்போலவே கண்டுங் காணாததுபோ லிருந்துவிடு. இது பதிலுக்குப் பதில்! பழிக்குப்பழி

ஆத்திரத்தின் வேளையில், அந்த ஆத்திரத்துடன் அந்த சக்தியும் தோன்றுகிறது. சில சமயங்களில் இந்த சக்தி உள்ளுக்குள்ளாகவே பொங்கிக்கொண்டிருந்து தருணம் கிடைத்ததும் திடீரென்று வெளிப் படுவதுமுண்டு. துக்கம் மிஞ்சியிருப்பின் அந்தத் துக்கத்தின் வழி யாகவும் இந்த சக்தி வெளிப்படுகிறது. வெறுப்பு பெருகிவிடுமாயின் அந்த வெறுப்பினூடே அந்த சக்தியும் வெளிப்படுகின்றது. வறுமையின் வேதனை மிக மிக மீறியதாயின் அந்த வறுமையின் வாயிலாகவும் அது தோற்றமாகிறது. பிறர் தனக்குச் செய்த வஞ்ச கத்தில் நேர்ந்த கொதிப்பின் மார்க்கமாகவும் அந்த சக்தி ஜனிக் கிறது. இவ்விதம் பலவகையிலும் ஏமாறி, இனி என்ன செய்வ தென்று திகைத்து அலறும் வேளையில் அத்தருணம் எங்கெந்த அவஸ்தைகளின் தன்மைகள் மிகுதிப்பட்டுள்ளனவோ அவற்றின் வழியாக இந்த சக்தி ஜனிக்கின்றது. இந்த சக்தியானது எல்லாம் வல்ல இறைவனிடத்திலிருந்தும் வருவது. ஒரு பெரும் வழித் துணைக் கருவியாவது, சோர்ந்தவனைக் கை தூக்கிவிடுவது. கண் கெட்டவனுக்கு வெளிச்சம் தருவது. திக்கற்றவனுக்குத் தெய்வமே போல் உடனிருந்து துணை உதவுவது, காப்பது, மீட்பது, தைரியப் படுத்துவது.

ஃ

ஏமாற்றுவதும், மற்றவரை மோசம் செய்வதும் இப்பொழுது இருக்கிற நிலையில் கெட்டிக்காரத்தனமாகவும், சாமர்த்தியமாகவும் பாவிக்கப்படுகிறதாயினும்—விளைவது கேடுகளே;—முடிவும் கேட்டி லேயே. ஏமாற்றமடைந்தோர் தாம் எய்திய ஏமாற்றத்தால் அதற்கு முன் தமக்கு இருந்த சக்தியனைத்தையும் ஒருங்கே இழக்கப் பெறுகின் றனர். அத்தருணம் அவர்கள் கொள்ளும் மன ஏக்கமானது காரி யத்திற்குக் கெடுதியாகிறது. இதில் முதலில் தோன்றுவது ஏக்கம்; பிறகு எதிர்ப்படுவது ஊக்கம். ஒருவன் தனது வயலின் அறுப்புக் காகச் சிலரை நம்பி எதிர்பார்க்கிறான். அவர்கள் இன்று நாளை யென்று காலம் போக்கிக் கடைசியில் வாராமலே போய்விட, அந்த ஏமாற்றத்தின் சக்தியைக்கொண்டு, தானே அறுப்புக்குப் போய் எல்லா வேலையும் செய்து, தானியங்களை வீட்டில் கொண்டுவந்து சேர்த்துவிடுகிறான். பிறர் உதவியின்றித் தன்னால் முடியாதென் றிருந்த ஒரு காரியத்தை—ஏமாறிவிடுவதினின்று உதிக்கும் சக்தி தோன்றியதும் சுலபமாய் செய்து முடித்துவிடக் கூடுமானதாகிறது. அவ்விதமே அது முடிந்தும் விடுகிறது. ஒரு சாமானுக்கு ஒருவரை மனஸ்பூர்வமாய் நம்புகிறான். அவன் ஏமாற்றிவிட்டால், அதற்காக ஏக்கம் கொண்டாலும், அடுத்த நிமிஷம் ஊக்கத்துடன் தானே அந்த

---

வானேயூறுந் தெய்வமே யென் வருத்தம் பாராயோ! எம்பெருமானே! என்னை நீர் கடாக்ஷித்து, எனது சக்திக்கு மேற்பட்ட ஆபத்தை விளைவித்துச் சோதிக்காம லிருப்பீராக. நேர்ந்த சோதனையினின்றும் என்னை விடுவிப்பீராக.

சாமானைச் செய்தோ, விலைக்குப் பெற்றோ அதனால் ஆகவேண்டிய காரியத்தை—வேலையை—நடத்தி முடித்துவிடுகிறான். ஒருவர் நமக்கு அவசியமாக வேண்டியதொன்றைத் தருவதாக நம்பிக்கையான வாக்கு கொடுக்கிறார். நாமும் அவர் வாக்கைப் பூரணமாய் நம்பி எவ்விதமும் தருவாரென்று எதிர்பார்க்கிறோம். பிறகு அவர் தன் னயங் கருதியோ, மற்றவரால் தடுக்கப்பட்டோ, வேறு எக்காரணங் கொண்டோ முன்பு வாக்கு தந்ததற்கு மாறாக—"அப்போது என்னவோ சொன்னேன்; இப்பொழுது காலமும் காரிய காரணங்களும் வேறு வகையாய்த் திரும்பிவிட்டன; நான் சொன்னபடி செய்ய முடியவில்லை—மன்னிக்கவும்"—என்று மிகவும் மரியாதையாய்க் கூறித் தப்பித்துக்கொண்டு விடுகிறார். அல்லது,—"எவ்விதமும் நான் கொடுக்கிறேன்; சற்றுப் பொறுத்துக்கொள்"—என்று பல நாள் அலைய வைத்து ஏமாற்றிவிடுகிறார். மனம் தீவிரமாக ஒரு காரியத்துக்கு நம்பி எதிர்பார்த்துக்கொண் டிருக்கும்பொழுது அது ஏமாற்றமாய் விடுகிறதாகையால், அதை எதிர்பார்த்த ஆவலினது உணர்ச்சி வேரற்ற மரம்போல் சாய்ந்து விழுவதில், அது சமயம் ஏக்கம் மனதில் வந்து புகுந்து கொள்கிறது. மனதும் வெகுவாய் நொந்து புண்ணாகிச் சுருங்குகிறது. அதற்குப் பின்பு ஒரு வகையாய்த் தேறி, வேறு எண்ணத்தில் இறங்க ஆயத்தமாகிறது. அப்பொழுது ஊக்கத்தின் சக்தி மனதில் புகுந்துகொள்ள, மனம் மறுபடியும் தீவிரமாக முயன்று வேலைசெய்யத் தொடங்கி விடுகிறது. அதற்குப் பிறகே நமது கண்ணைத் துடைத்துக்கொண்டு, ஏமாறியதிலிருந்தும் பெற்ற புது சக்தியுடன் மேல்நடத்த வேண்டியவைகளுக்குத் தெய்வ கிருபையை நம்பிக்கொண்டு துணிகிறோம்.

ஃ

அவர் தருவதாகக் கூறிய பொருள் நமக்கு மிக்க அவசியமாதலால், எந்த விதத்திலாவது அதை நமது உழைப்பின் மூலமாகவே பெற்றுவிட முயற்சிக்கிறோம். கடைசியில் அவ்விதமான பொருள் ஒன்றை விலைக்கு வாங்கியாவது, நாமே நமது பிரயாசையில் தயாரித்துக் கொண்டாவது அதை அடைந்து விடுகிறோம். ஏமாறிப் போனோமேயென்று ஏங்கி ஏங்கி நாம் வெறுமனே வாழ்நாள் கழிக்கிறோமா? இல்லை, இல்லை. அவ்விதம் ஏங்குவதெல்லாம் சில நிமிஷங்கள் வரையுமே. பிறகு, அடுத்த நிமிஷம் ஏமாறியதின் காரணமாகத் தோன்றும் புதிய சக்தி நம்மைத் தூண்டிவிட்டுப் புதிய மனிதனாக்கி விடுகிறது. ஆகவே, ஏமாறுவதும் ஒரு நன்மைக்கே. ஏமாறுவதில் தான் நமக்குப் பயன்படத் தக்கதான ஜீவசக்தியின்

உன் மனது எக்காலத்தும் குளிர்ந்திருக்க; உன் நேசம் எப்பொழுதும் தழைத்து வளர்ந்து ஓங்குக; உன் தூய நற்குணப் பரிமளப்பூக்கள் என்ஞான்றும் மணங் கமழ்க. நேசா! சகோதரா! என்றும் என்னை நினைவு கூர்ந்திடுக.

ஊக்கம் இருக்கிறது. நமது வாழ்வில் அடுத்தடுத்து எதிர்படுகிற ஏமாற்றங்களே,—ஏற்கெனவே மண்ணோடு மண்ணாய்ப் போயிருக்க வேண்டிய ஊக்கத்திற்கு,—புதிய உயிரைக் கொடுத்து நாளது வரையும் ஜீவிக்க வைத்திருக்கின்றன. செயலுக்குக் காரணமாக உள்ளது எண்ணம். ஊக்கத்தின் பயனாய் மனம் உக்கிரகப்பட்டுத் தீவிரத்தில் நிற்க, அதனைத் தழுவி எண்ணமும் எழுகின்றது. ஆகவே, எண்ணமும் செயலும் ஊக்கத்தின் மூலமாய் உதிக்கின்றன. இந்த ஊக்கத்தைத் தட்டி எழுப்பி விடுவது கடைசியில் ஒருவன் பெறுகிற ஏமாற்றமே. ஆதலின், ஏமாறிவிட்டோமே, இனி எப்படித் தலை தூக்குவது என்று அஞ்சவேண்டியதில்லை. ஊக்கம் மிகுந்தால் காடு மேடுகளிலும்கூட வழி தெரிந்துகொண்டு வேகமாய்ப் போகலாம்; நினைத்ததையும் நிறைவேற்றிக் கொள்ளலாம். அது கூடும். ஆகும்.

ஃ

எந்தக் காலத்தில் தான் ஒருவன் மற்றவனை ஏமாற்றாமல் வாழ்ந்தான்? ஏமாற்றுவது மனித இயற்கையே. ஏனைய ஜீவ வர்க்கங்களினிடையும் ஏமாற்றுதலென்பது சகஜமே. மனிதனுக்கும் மற்ற பிராணிவர்க்கங்கட்கும் உள்ள வித்தியாஸமாவது:—மற்ற ஜீவ ஜந்துக்கள் தம்மைப்பற்றிய மட்டில் தமது பசி நிவர்த்திக்கான உணவுக்கும், தமது வாழ்க்கைக்கும் வேண்டிய அளவில் மற்றவைகளை ஏமாற்றுகின்றன. மனிதனோ அங்ஙனமல்ல; தனக்கு வேண்டியதற்கு மேலும் ஏமாற்றமுயன்று, அதனை ஒரு தற்பெருமையாகவும் எண்ணுகிறான். ஏமாற்றுகிறவர்களும் ஏமாறுவார்கள். இது தான் மனிதனுக்குச் சரியாகத் தெரிவதில்லை. அல்லது, இதை அவன் மறந்துவிடுகிறான். நம்மை ஒரு சமயத்தில் ஏமாற்றுகிற ஒருவனை நாம் சமயம் வாய்க்கும் பொழுது ஏமாற்றி விடமாட்டோமா? இது ஏமாற்றுகிறவர்களுடைய மூளைக்கு எட்டுவதேயில்லை. ஏமாறியவர் ஒரு முறை தவறலாம். இரண்டாம் முறையும் அவ்விதமே நேரிடலாம். பின்னும் அடுத்தடுத்து முயன்றால் கிட்டாத காரியமும் உண்டோ? தனக்கு எவரும் சமானமில்லையென்று சொல்லத் தகுந்த நிலையில் ஒரு வியாபாரி இருக்கிறான். இத்தகையோனிடம் ஒருவன் ஒரு விற்பனைக்கு எதிர்பார்க்கிறான். அந்த சாமானை விற்று லாபம் கொடுக்க அவனும் இணங்குகிறான். அதை இவனும் நம்புகிறான். கடைசியிலோ வியாபாரி தன்னை நம்பியவன் திடுக்கிட்டுப் போகும்படி அவனை ஏமாற்றி விடுகிறான். உடனே அவனுக்கு ஆத்திரம் எழுகின்றது. ஏமாறியதிலிருந்தும் பெற்ற அநுபவத்தின் பயனாக ஒரு புது சக்தி தோன்றிக்

---

*தனக்கு சந்தர்ப்பம் வாய்த்தபோது அந்த நல்ல குணத்தை உபயோகிக்காது விட்டுவிட்டு, இப்பொழுது பிறருக்கு அதை உபதேசம் செய்யப்புகுவது மதிப்பைக் கொடுக்கக்கூடியதாகுமா?*

கொள்கிறது. அந்த சக்தியோடு தனக்கு எப்பொழுது தருணம் வாய்க்குமென்று எதிர்பார்க்கிறான். கடவுள் அவனுக்குத் துணை யாக இன்னொருவரையும் சேர்த்து விடுகிறார். அந்தத் துணையின் உதவிகொண்டு அந்த வியாபாரியைப்போலவே அவனுக்கு சமமாக, அவனிலும் மேம்பட்டதாக அடுத்த கடை யொன்று ஏற்படுத்தி விடுகிறான். அவனைவிட சிலாக்கியமான ஸ்தானத்திற்கு உயர்ந்தும் விடுகிறான். இவ்விதம் உயர்ந்துவிட்ட தன்மையானது இவன் நம்பி ஏமாறியதினின்றும் உண்டானது. அவ்விதம் அவன் ஏமாறாவிட் டால் இந்தப் புதிய சக்தியும், புது எண்ணங்களும் அவன் உள்ளத் தில் உதிக்கப்போவதில்லை. ஏமாறிய பிறகே ஏறும் ஏணி எதிர்படும்.

ஃ

ஆகவே, ஒருவன் ஒன்றுக்கு ஒருவரிடம் எதிர்பார்த்து, அந் தப்படியே கிடைத்து விடுமாகில், அதிலும் திருப்திபட இடமிருக்கி றது. ஒருவேளை அதில் ஏமாறிப்போவானாகில், அந்த ஏமாற்றத் தின் பயனாகப் பிறகு தானாகவே விழிப்பெய்திப் புதிய சக்தியின் துணைபற்றித் தன்னில்தானே முயன்று வெற்றிகொள்ளப்போகிற எப்பொழுதுமேயுள்ள பரிகாரம் என்றைக்கும் இருக்கவே இருக் கிறது. அந்தப் பரிகாரம் தன்னைவிட்டு ஓடிப்போய் விடாதானதால், தான் ஏமாறியதிலும் கவலைப்படாதிருக்க இடம் தருகிறது. இதி லிருந்தும் தெரிவது என்ன? நாம் ஒருவரிடம் நம்பிக்கை வைத்து மனஸ்பூர்வமாக எதிர்பார்ப்பதில் பெரும்பான்மையும் குற்றமில்லை யென்பதே. உலக வாழ்வில் எதற்கும் நம்பித்தான் எந்தக் காரியங் களும் செய்யவேண்டி யிருக்கிறது. நம்பாதவனுக்கு உலகமே யில்லை; கடவுளுமில்லை. அவ்விதம் நம்பி எதிர்பார்ப்பதிலே அவன் நம்மை ஏய்த்துவிடலாமென்று நாம் நினைக்கவேண்டி வருமானால், அதன் பலனாக உண்டாகப்போகிற ஏமாற்றத்தினால் நமக்கு ஏற்படும் சக்தியானது,—இப்பொழுது நாம் "நம்பலாமா—நம்பவேண்டாமா" என்று அவநம்பிக்கைப்பட்டு அவசரப்படுவதால் எந்த அளவுக்கு நன்மை பெற முந்திக்கொள்ளக்கூடுமோ, — அதற்கப்பாலுங்கூட மேற்பட்ட அளவுக்கு அந்த ஏமாற்றத்தின் சக்தி நம்மைக் கொண்டு போய்விட்டு நலம் கொள்ளச் செய்து வெற்றி தந்துவிடும். ராம னிடம் தனது நிலங்களை அடகு வைத்து சோமன் பெற்ற பணத்தை இன்னும் திருப்பித் தராமல் சில தவணைகள் சொல்லுகிறான். ராமனோ தனது கடன் தொகை வராவிடில் நிலங்களை ஜப்தி செய்து தனது பணத்தை யடைந்து விடலாமென்றெண்ணி சோமன் சொல் லுகிற தவணைகளில் மனஸ்பூர்வமாக நம்பிக்கை வைக்கிறான்.

---

வீட்டைப் பூட்டிக்கொண்டு பிரயாணமாய்ப் புறப்படப்போகிற தருணத் தில், வண்டி வந்து அதிலிருந்தும் பெட்டியுடன் ஒருவர் இறங்கி வீட்டிற்குள் புகுந்தால் இருவர் பாடும் திண்டாட்டமும், திகைப்பும், தொந்தரையுமே.

சோமன் தன் தவணையின் கெடுவில் கடன் பணத்தைத் தந்துவிட்டால்—அதுவும் திருப்தியே. தராமல் ஏமாற்றிவிடும் பக்ஷத்தில் அவன் நிலங்களை ஜப்திசெய்து அந்தப் பணத்தைப் பெறுவதில்—அதுவும் திருப்தியே. இவ்விதமாக நம்பிப் பொறுமைப்படக் கூடிய தன்மையானது, — ஏமாறியதின்பிறகு ஏற்படக்கூடிய சக்தியைத் தெளிவாகக் கண்டுகொண்டுள்ள,—வீர நெஞ்சத்தினது திடமான ஒரு பெரிய துணிபாகும். ஆகவே, மேலே சொன்னபடி, நாம் நம்பிக்கை வைத்து எதிர்பார்த்தபடி பலன் கிடைப்பினும் நலமே. கிடைக்காது ஏமாற்றமெய்திடினும் அப்போதுங்கூட நலமே. ஆனால், நாம் எப்பொழுதும் விழித்தவர்களாய், எதிர்பார்த்தது கிடைக்காவிடில், உடனே நீதிஸ்தலத்தில் வழக்கு கொண்டுவந்து, நாம் இழந்த தொகையைப் பெறுதற்குத் தயாராக இருப்பவர்களாய், நம்மைத் தோற்றுவித்துக்கொண்டு அவ்விதமே நடக்கவேண்டும். இவ்வாறு ஒரே உறுதியுடன் நடப்போமாயின் ஏமாறுவதென்பது அபூர்வமாகவே ஆகிவிடும். நமக்கு வரவேண்டியதையும் பெற்றுவிடலாம்.

ஃ

ஏமாறுவதில் ஏற்படும் சக்தியை ஐந்துவகையாகப் பிரிக்கலாம்.

**1.** **சோம்பியும், தவறியும் ஏமாறுவதில் ஏற்படும் சக்தி.** இது தன் பிழையாலும், முன் அநுபவமின்மையாலும் உண்டானது.

**2.** **தன்னைத் தான் உயிர் காத்துக்கொள்ள முயன்று ஏமாறுவதில் தோன்றும் சக்தி.** இது இயற்கையில் ஸம்பவிப்பது. பரம்பரை ஞானமாகத் தொடர்ந்து நிற்பது.

**3.** **மரணத்தால் பிரிந்து ஏமாறுவதில் எதிர்படும் சக்தி.** இது இயற்கையின் செயலை நினைப்பூட்ட அடிக்கடி வருவதாகும்.

**4.** **தன் தேவையின் நிமித்தம் விட்டுக்கொடுத்து ஏமாறுவதில் உதிக்கும் சக்தி.** இது பெரும்பான்மை வர்த்தகப் போக்கிலும், சிறுபான்மை அறியாமையின் வழியிலும் நெடுகக் காண்பது.

**5.** **நம்பி எதிர்நோக்கி ஏமாறுவதில் ஜனிக்கும் சக்தி.** இது பிறரது முற்றிய சுயநலத்தாலும், மறு கணத்தில் மாறிவிடுங் குணத்தன்மையாலும், உறுதி நெஞ்சு இன்மையாலும் விளைவது.

இந்த ஐந்துவித சக்திகளையும் அடுத்த ஸஞ்சிகையில் விளக்கிப் பூர்த்தி செய்கிறோம். புதிய வருடம் புதுவிதமான ஆநந்தத்தைத் தந்து அனைவருக்கும் மங்களத்தைச் செய்யுமாக.

---

"கல்லில் பாசி படிவதுபோல் பத்திரிகாசிரியருக்கு எல்லாவித ஸர்க்குலர்களும், விக்ஞாபனங்களும், பிரசுரங்களும், அத்துடன் வெறிபிடித்தவர்களிடமிருந்தும்—பிரேமை கொண்டவர்களிடமிருந்தும் வேண்டாமலே வியாசங்களும் வருகின்றன" என்கிறார்——ஆசிரியர் ஸ்ரீமான் தேசாய்.




**லண்டனில் சமாசாரப் பத்திரிகைகள்:**—காலையில் வெளிவரும் பத்திரிகைகள் சந்தாதார்களுக்கு நேரே போய்விடுகின்றன. தெருவில் விற்கப்படுவதில்லை. பகல் ஒரு மணிக்கு மேல்தான் எல்லா பத்திரிகைகளும் வெளிவருகின்றன. அதுமுதல் இரவு 8-மணிவரையிலும் தெருக்களில் பத்திரிகை விற்பவர்களின் கூச்சல்தான். ஒரே பத்திரிகை ஒருதினத்திலேயே அடுத்தடுத்துப் பல விசேஷப் பதிப்புகளை வெளியிட அவற்றையும் வாங்கிப் படிக்கிறார்கள். ரயிலில் போகிறவர்கள் ரயில்வே ஸ்டேஷனில் வாங்கிக்கொள்கிறார்கள். ஒருமணிக்கு முன் ஒரு பத்திரிகை. அதே பத்திரிகை அடுத்த இன்னொரு மணிக்குள் புதிய சமாசாரங்களுடன் மறுபடி வருகிறது. ஆதலின் இரவுக்குமுன் ஒரு பத்திரிகையின் 6-பதிப்புகளையாவது, அல்லது வெவ்வேறான ஆறு பத்திரிகைகளையாவது ஒவ்வொருவரும் சாதாரணமாக வாங்கிவாசிக்கிறார்கள். நம் நாட்டிலோ யார் பத்திரிகை அவசியம் வாங்கி வாசிக்க வேண்டுமோ அவர்கள் அதைக் கண்ணாற்கூடப் பார்ப்பதில்லை. யார் வாசிக்கிறார்களோ, அவர்கள் அதற்குப் பணம் கொடுக்கிறதில்லை. யார் துட்டு போட்டு வாங்குகிறார்களோ, அவர்கள் அதைச் சேர்த்து வைத்துப் பிரயோஜனப்படுத்துவதில்லை.

**தட்டுதலின் குறிப்பு:**—லண்டனில் பல பல வகையாய்த் தட்டுகிறதினால் இன்னின்னார் என்று சொல்லும்படி இருக்கிறது. ஒரு தட்டு அது தான் வியாபாரி. ஒன்றன்பின்னொன்றாய்த் தொடர்ந்து இரண்டு தட்டு—அதுதான் தபால்காரன். இரண்டு இரட்டித்த தட்டுகள்—அது தந்திக்காரப் பையன். முதலில் ஒரு தட்டும் பிறகு பல தட்டுகளும்—அது எவரோ பார்க்க வந்திருப்பதற்கு அடையாளமாகுமாம்!

**சீனா காகிதம் செய்ய உதவும் செடி:**—மிருகங்கள் பட்சிகள் முதலிய தாவரசங்கம சாஸ்திரப் பொருள்களின் சித்திரங்களை எழுதுவதற்கு சீனாதேசத்தார் ஒருவிதமான கடிதத்தை உபயோகித்து வருகிறார்கள். அது மிகவும் வழவழப்பும் நொய்மையும் உள்ளது. அது டங்ஸ்லா என்ற ஓர் வகைச் செடியின் சடையினால் உண்டாகிறது.

**பாரஸீக தேசத்து அரசருடைய கொலுவின் வைபவம்:**—கீழ்த்திசையிலுள்ள அரசர்களெல்லாம் தங்களைப் பார்க்கின்றவர்களுடைய கண்கள் அதிசயித்துப் பரந்து ஆணியிட்டுப் போகும்படித் தாங்கள் அலங்கரித்துக்கொண்டு அழகு செய்துகொள்வதில் மிகவும் பிரியமுள்ளவர்கள். அன்றியும், தங்களை மற்றவர்கள் வேறொரு உயர்ந்த பிறப்பென்று எண்ணிக்கொள்ளத்தக்கதாக ஜம்பம் காட்டிப் பெருமை பாராட்டவுங் கருத்து கொண்டவர்கள். ஆதலால், அவர்களுடைய சபைகளில் பொன், வெள்ளி, பளிங்கு முதலானவைகளாலே செய்யப்பட்ட விசித்திரமான பதுமைகள், தீபங்கள், கண்ணாடிகள் முதலான அரிய பொருள்கள்

---

நமது வாழ்வில் நாம் நடத்தும் காரியங்கள் ஒவ்வொன்றும் ஆண்டவனின் ஞாபகத்துடன் செய்யப்படவேண்டும். அதுவே நலம்பெற வழி.

நிறைத்து வைக்கப்பட்டிருக்கும். பாரஸீக தேசத்துக்குப் போய்வந்த ஸர் ராபர்ட் போர்ட்டர் என்பவர் அத்தேசத்தில் ராஜசபை கூடுகிற விதத்தைப் பின்வருமாறு கூறுகிறார்.

"ராஜகுமாரர்களில் மூத்தவன் சிம்மாசனத்திற்கு வலப்புறத்திலும், மற்றப் பிள்ளைகள் வயது கிரமப்படி வரிசையாய் இடதுபக்கத்திலும் நிற்க, மந்திரி பிரதானி முதலிய பெரிய உத்தியோகஸ்தர்களெல்லாம் திவ்ய மான ஆடையாபரணங்கள் அணிந்து ஒழுங்காய் நின்று அரசன் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். இப்படி யாவரும் சபைகூடி நிச்சப்த மாய் இருக்கும்வேளையில் திடீரென்று வெடிகளும் மேளவாத்தியங்களும் மற்றும் அநேகவித கோஷங்களும் கேட்டன. இவையெல்லாம் ராஜா வருவதற்கு அடையாளமாம். அன்றியும், அதற்காகவே பழக்கி வைத்திருக்கிற இரண்டு கஜங்க ளும் கர்ஜித்தன. இப்படி கோலா கலமாய் இருக்க, ராஜா சபாமண் டபத்திற்கு வந்து சிம்மாசனத்தில் உட்கார்ந்தார். தேஜோமயமான அவ்வரசனைக் கண்டு என் கண் கூசிப்போயிற்று. அவர் தலைமேல் முடித்துக்கொண்டிருந்த மூன்று அந்தஸ்துள்ள கிரீடத்தின் அழகு சொல்லி முடியாது. அது முழு தும் வஜ்ஜிரம், முத்து, மாணிக் கம், மரகதம் முதலிய நானாவித ரத்தனங்கள் இழைத்து இடை யிடையே கறுப்பு இறகுகளும் நுனியில் ஒருபெரிய முத்துமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. அன்றியும் கழுத்தில் இரண்டு முத்து மாலைகளும், புஜங்களில் தோள்வளையும், அரையில் அரை ஞாணும் ஜொலித்துக்கொண்டிருந் தன. சிம்மாசனம் வெள்ளைக் கல்லி னால் செய்து மேலே பொற்றகடுகள் அடித்து அதன்மேல் சாலுவைகள் போர்த்திருந்தன. அந்தச் சிம்மாசன மண்டபத்தில் பலவிதமான சித்திரங் கள் எழுதிக் கண்ணாடிகளும் கட்டி யிருந்தன. அரசன் சிம்மாசனத்தில் உட்காருகிறவரையில், அங்குள்ளோர் அனைவரும் நின்றபடியே வணங்கி யிருந்தார்கள். இப்படி நிச்சப்தமா யிருக்க, கட்டியக்காரர்களெல்லாம் ஒரேமாதிரியாய் அரசனுடைய பிருது களையும், பட்டங்களையும், குணாதிச யங்களையும், சௌரியத்தையும் போற் றினார்கள்" என்று எழுதியிருக்கிறார்.

---


பேசுவது பதிநாமம்
—பாடுவது காமக்கிழத்தி
நாமமா? சொல்வது சிவகதை
--அநுஷ்டிப்பது வியபசாரமா?
நடிப்பது அன்பரைப் போல்—
தடிப்பது பகையிலா? இருப்
பது பக்த சிரோமணியென—
கிடப்பது காலாந்தக பாதகிக
ளுடனென்னவா? தொடுப்பது
ஏகேஸ்வர வாதம்—முடிப்பது
முழு மூடர் சம்வாதமா? செய்
வது வேதாந்த சிரவணம்—
நைவது பிறமாதரை யுன்னி
யோ? தலைகீழ்பாடம்எதுக்கோ?

---

"தேருந்தோறும் இன்னலம் பயக்கும் நம் தமிழ்மொழி முற்காலத்துப் பாண்டியராலும், பிற்காலத்துச் சிற்றரசராலும், குறுநிலமன்னராலும், மடாதிபதிகளாலும் ஆதரிக்கப்பட்டுத் தலைநிமிர்ந்தது".




# ஆநந்தக் களிப்பு.

ஆநந்த வாநந்த பிரம்ஹ சச்சிதாநந்த வாநந்த வாநந்த பிரம்ஹ

ஓம் தத்சத் தென்னு மொழியே—வேத,
மோதிய விந்தையை விளம்பும் வியாசன்,
ஓமென்பதற்குப் பொருள் கேள்—அது,
ஓங்குமுத் தொழிலு நடத்துவதாமே. (ஆநந்த)

தத்தென்பதற்குப் பொருள் கேள்—அது,
சாற்று மாணும் பெண்ணுமலியு மல்லாதே,
சத்தென்பதற்குப் பொருள் கேள்—அது,
சத்தியமாய் நின்றிலங்கும் பொருளாம். (ஆநந்த)

பழுதையிருந்தது மெய்யே—அந்தப்,
பழுதையைப் பாம்பென்ற பாவனை பொய்யே,
பழுதையைப் பழுதை யென்றுணர்ந்த—வன்றோன்,
பரமஞானி யென்று பகரவே வேண்டும். (ஆநந்த)

சிலந்தியு நூலுமே போலச்—சேகத்துக்குத்,
தேவே கருத்தாவும் வத்துவுமானான்,
கலந்த காரிய கருத்தாவும்—அவனே,
காரணவத்துவு மானானே தோழி. (ஆநந்த)

மண்ணொன்றே பலபாண்ட மாச்சு—அதுபோல்,
மயேச்சுரந்தானே விராட்டுவு மானான்,
எண்ணறு பலவத் தடங்கு—மிந்த,
எழில் பிரபஞ்சமுந் தானாகி நின்றான். (ஆநந்த)

ஒன்றை நன்றாயறிய வேண்டும்—அந்த,
ஒன்றையே கடைப்பிடியாய்த் தொழ வேண்டும்,
என்றும் வீண் வாதங்கள் செய்யு—மற்,
றெல்லாப் பிரசங்கமும் விடுவாய் நீ தோழி. (ஆநந்த)

---

பணம்—என்பது மகா பொல்லாத வஸ்து. உறவுமுறைமை, சிநேகம் முதலிய எந்தப் பாசமும் பணத்துக்கு முன்னால் நிற்குமா? ஒருக்காலுமில்லை. பணப்பேச்சு எடுக்கையில்தான் மனஸ்தாபமும் சிடுசிடுப்பும் மிக மீறுகிறது.

மனிதரும் வானோருஞ் சமமாய்—அந்த,
மகாப்பரப் பிரம்ஹத்தி லயிக்கமாக,
மனதைச் செலுத்தியே தன்னை—முழுதும்,
மறப்பவனே மகாயோகியாந் தோழி. (ஆநந்த)

பொறிபுல னந்தக்கரணம்—மிகு,
பொல்லாத ஆசைகள் பாசங்களனைத்தும்,
அறவே யடக்கு தலன்றோ—மெய்யறி,
வாளர் கடமை யென்றறிவாய் நீ தோழி. (ஆநந்த)

II

## நிராமயக் கண்ணிகள்.



1. குருடனுக்கு மற்றோர் குருடன் வழி காட்டுதல் போல்,
குருக்கண்மார் வந்து கூத்தாடுகிறார் நிராமயமே.

2. கல்விக் கடையாளங் கடவுளைக் காண்பதுவே,
செல்வ மெனல் ஞானத் தேற்ற நிராமயமே.

3. அசையுமசையாப்பொருள்க ளனைத்துமாய் நிற்பதோன்றும்
நிசமறிந்தோர் மோட்ச நிலைகாண்பார் நிராமயமே.

4. சிறியதிலுஞ் சிறிது பெரியதிலும் பெரிதே,
அறிவாய் விளங்கும் ஆன்மா நிராமயமே.

5. சீவப்பிராணிகளின் சீரிருதயங்களிலே,
ஆவலுடனான்மா அணுகி நிற்கும் நிராமயமே.

6. அறிய மனமில்லார்க்கு அகன்று தூரமாய் நின்றே,
அறியவாசை கொண்டவர்க் கணுகிநிற்கு நிராமயமே.

7. உலகமுழுது முட்புறமு மேற்புறமும்,
நிலைபெற வியாபித்து நிற்கு நிராமயமே.

8. மெய்யறிவு பெற்றவரே விமலனிவ் வுலகமெலாம்
உய்ய உலாவுவதை யுற்றறிவார் நிராமயமே.

9. உணரத்தகு பெரிய உருவல்ல சிறியதல்ல,
இணையறவே நின்ற ஏகம் நிராமயமே.

10. சருவ வியாபகமும் சருவஞ்ஞத்துவமு முடைய,
பரமன் சுயம்பு பதியே நிராமயமே.

11. வேதாகமங்கள் விரித்துணர்ந்து கொண்டாலும்,
நீத மெய்ஞ்ஞான நெறிகாணார் நிராமயமே.

12. தீங்கேயுறுதிய செய்கைகளிலே யிருந்து,
நீங்கினர்க்கே ஞான நெறிநேரு நிராமயமே.

# ஸ்ரீகாளஹஸ்தி மகாத்மியம்

(ஸ்ரீலஸ்ரீ தருஸ்வாமிகள்.)



இப்பரத கண்டத்தில் தொண்டை மண்டலத்திலே திருவேங்கிடத்திற்கும் வடபால் பொன்முகரி நதியால் சூழப்பெற்றதாயும், 10யோசனை விஸ்தீரணமும், 5-யோசனை அகலமும் உடையதாயும், சீகாளஹஸ்தி, தக்ஷிண கைலாயம், திருக்காளத்தி, காளத்தி, சிவாநந்தகிரி, சிவாநந்த நிலயம், விஞ்ஞானக்ஷேத்திரம், கண்ணப்புரம், மும்முடிச் சோழபுரம் என்றும் அநேகம் திருநாமங்களால் அலங்கரிக்கப் பெற்ற ஸ்தலம் ஒன்றுளது. அதன் மகிமையும் வனப்பும் ஆதிசேடனும் அளவிடற் கரியதாம். ஓர் காலத்தில் ஸ்ரீ வசிட்டருடைய தவத்திற்கிரங்கி பரமசிவம் ஆங்கு அவருக்கருள் செய்து, அவ்விடமே அமர்ந்த படியால் கைலாயத்தின் ஓர் சிகரம் இங்கு மேருவிற்க்குத் தென்பால் ஐந்து சிகரங்களோடு தங்கினமையின் இதற்கு தக்ஷிண கைலை யென்றும், சிலந்தியும் பாம்பும், யானையும் பூசித்து முக்தியடைந்தமையின், ஸ்ரீகாளஹஸ்தி யென்னும் காரணப் பெயரால் இது வழங்கப்படு மென்பதும் புராணப் பிரசித்தம்.

இத்தலமானது சென்னையினின்றும் புறப்பட்டால் ரேணுகுண்டாவில் வண்டிமாறிக் காளத்தி யென்னும் ஸ்டேஷனில் இறங்கவேண்டியது. அவ்விடமிருந்து ஒரு மைல் தூரம் சென்றால் பொன்முகரி யென்னும் நதி காணப்படும். அதில் ராஜா பணக்கால் அவர்களால் மிக்க அழகான பாலம் ஒன்று கட்டப்பட்டிருக்கிறது. அதன் வழியாக ஆற்றைக் கடந்து சென்றால் மாடவீதியும், நகரமும், கோபுரமும், பர்வதமும் ஒன்றன்பின் ஒன்றாக மிக உன்னதமாய் அமைந்திருக்கும் அமைப்பையும், ஸ்ரீகாளஹஸ்தி நாதர் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் பெருமையும் கண்ணுறலாம். "மூர்த்தி தலந்தீர்த்த முறையாய்த் தொடங்கினர்க்கோர் வார்த்தைசொல்லச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" என்று நமது தாயுமான சுவாமிகள் கூறியபடியே, பரமசிவம் திருக்கோவில் கொண்டிருப்பதும், பொன்முகரி முதலிய அநேக தீர்த்தங்களும், ஆரணியமும் முனிவர்கள் ஆசிரமும், மலையும் மிக அமைப்பாகவே எந்த ஸ்தலங்களிலும் மேன்மை மிக்கதாய், எவர் மனதையும் கவர்ந்துவிடும் தன்மையுடன் பிரகாசிக்கக்காணலாம். சிலஇடத்தில் ஸ்தலமும் நதியும், சிலவிடத்தில் ஸ்தலமும் நதியும் காடும் இவ்வாறிருக்கின்றன. இத்தக்ஷிண கைலாயம், நதியாலும் ஆரண்யத்தாலும் பர்வதத்தாலும் சோலைகளாலும் நகரத்தாலும் சூழப் பெற்று, பர்வதத்தில் சிவபிரான் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருப்பது மிக்க அற்புதமான காக்ஷியாகும்.

---

உனக்கு சொத்து எழுதிவைக்கிறேன், வீடு எழுதி வைக்கிறேன், என்மகளைத்தருகிறேன், அதை இதைக் கொடுக்கிறேன் என்றதினாலேயே நம்பி வாழுறதே. கொடாமற்போன சங்கதிகளும், அதற்குள் ஒரு சண்டை வந்து வெவ்வேறாகிப்பிரிந்து விட்ட சங்கதிகளும் எவ்வளவோ வண்டி வண்டியாய் உண்டு.

அநேகம் ஸ்தலங்களில் பரமசிவம் எழுந்தருளி யிருந்தும் கைலாசம் என்று வழங்காமல் இதற்கு இம்மகிமை வாய்ந்த காரணம் இதன் அமைப்பாலேயே நன்கு விளங்குவதாம். இந்தப் பர்வதத்தின் அடியில்—சுகர், சவுனகர் அகஸ்தியர், வசிட்டர், பராசர் முதலிய மஹரிஷிகளின் தபோஸ்தானமாயும் விளங்கி யிருக்கின்றன. அதற்கான சில அடையாளங்களும் அவர்களால் ஸ்தாபிக்கப்பெற்ற ஆலயங்களும், ஆங்காங்கு காணப் பெறலாம். கைலாயம் எப்படித் தேவர்கள் முனிவர்கள் சித்தவித்தியாதரர் மகரிஷிகளாலும் சூழப் பெற்றதாய்ப் புராணங் கூறுகின்றதோ அதை நாம் பிரத்தியக்ஷமாய் ஈண்டு காணலாம்.

மெய்யன்பையே திருவுருவாகக்கொண்ட ஸ்ரீகண்ணப்ப நாயனர் வேடுவ குலத்தில் அவதரித்து, இடையீடின்றிப் பரமசிவத்தை வழிபட்டு ஆறுநாளில் முத்தியடைந்த தலமாகும்.

பர்வத சிகரத்தினின்றும் சோலையுட் பிரவேசித்து நதியாற் படிந்துலவும் அதிசீதளமான காற்றும், எவ்விடங்களிலும் திவ்வியமான மணற்கேணிகளின் ஜலமும், சரீர ஆரோக்கியத்திற்கும், எவ்வித ரோகங்களுக்கும், ஜன்ம நோய்க்கும் பரம ஒளடதமாகும் என்பதை ஆங்கு சென்று பார்த்தால் யாவருக்கும் சொல்லாமலே நன்கு விளங்குவதாம். மனித ஜென்மத்தை எடுத்த ஒவ்வொருவரும் அதிசுலபத்தில் கிடைக்கப்பெற்ற இத் தக்ஷிணகைலையை அவசியம் சென்று தரிசிக்கத் தக்கதாம்.

ஸ்ரீகாந்த மஹாபுராணத்தில் இத்தலத்தின் மகிமையைப்பற்றி ஸ்ரீவியாசரின் சிஷியராகிய சூதபுராணிகரால் அடிக்கடி கூறப்பட்டிருக்கின்றது. அதாவது:—இது விராட் புருடனுடைய விசுத்திஸ்தான மென்றும், பிரமதேவருடைய அநாகத ஸ்தான மென்றும், பஞ்சபூத ஸ்தலங்களில் பிருதுவி லிங்கம் திருவாரூரென்றும், அப்பு திருவானைக்கா வென்றும், அக்கினி திருவருணை யென்றும், வாய்வு காளஹஸ்தி யென்றும், ஆகாசம் சிதம்பரம் என்றும் கூறப்பட்டிருக்கின்றது. மற்றதைப் புராணத்தில் காண்க.


அமிழ்தினுமினிய அறுசுவை யுண்டி யுகத்தலும், அரிய மதிப்புள்ள அழகு பட்டாடை யுடுத்தலும், களப கஸ்தூரிக் கலவைப் பூச்சணிதலும், அப்ஸரஸ்திரீகளினும் அதிக வனப்பு வாய்ந்த அரிவைமார்களை யநுபவித்தலும், அட்டாவதானி—வெண்பாப் புலி ஆதிய பட்டங்களைத் தாமேயேற்றலும், பிறர் தரப் பெறலுமன்றோ நம்பால் இந்நாள் விரும்பப்பட்டுக் கிடப்பன—? இனி, வஞ்சனை—மோசங்கள் எத்தனை ? இவை பிறவிப்பிணி யகற்றுமோ ?

---

மறைந்து கிடக்கும் மாயை இதுதான் என்பதை ஒருவன் தெளிவாகக் கண்டுணரும்போது, கண்டும் காணாதது போலவே இரு என்கிற ஞானோபதேசமும் அந்த சமயம் அவனுக்கு ஊட்டிவிடப் படுகிறது. அவனும் அவ்விதமே தெரிந்தும் தெரியாதவனாகவே நடிக்கிறான். இதுவே பெரிய ஞானரகசியம்.




## நன்ருகப் பாடம் படித்தல்.

1. அதோ பார். ராதாவும் கோபாலனும் படிக்கிருர்கள். அவர்களின் கையில் புஸ்தகம் இருக்கிறது. ஆனுல் படிக்கவில்லை. கோபாலன் சிரித்துப் பேசுகிருன். ராதா "அப்படிச் சொன்னது யார்" என்று கேட்கிருள். பாடம் படிக்கிற வேளையில் என்ன பேச்சு? பேசியபடி இருந்தால் பாடம்வருமா? படித்தால் அல்லவா பாடம் வரும்? படிக்கிறபோது பேசக்கூடாது. இந்த வீண் பேச்சு நாளைக்கு நமக்குத் துணையாக உதவாது. நன்ருகப் படித்தால் அந்தப் படிப்பு தான் நமக்கு உதவும். நாமும் அதிகம் படித்தவர்களாக ஆகலாம்.



2. ஒரு மணி நேரமாவது படிக்க வேண்டும். நன்ருகக் கவனித்து வாசிக்க வேண்டும். படிக்கும்போது அந்தப் பக்கம் இந்தப் பக்கம் பார்க்கக் கூடாது. புஸ்தகத்தையே பார்க்கவேண்டும். அப்பொழுதுதான் படிப்பு வரும். படித்த பிறகு அதை எழுதிப் பார்க்க வேண்டும். அப்பொழுது என்ன என்ன எழுத்துப் பிழைகள் விழுந்தது என்று தெரியும். அந்தத் தப்பிதங்களைக் கவனித்துத் திருத்திக் கொள்ளவேண்டும். பிறகு தப்பு வராது.

3. பழய பாடத்தைத் திரும்பத் திரும்பப் படித்தால் அது தான் புதிய பாடம். பழய மனிதரை மறுபடி பார்த்

தால் வெகு சந்தோஷம் அல்லவா? பழய பாடம் சுலப மாய்ப் படிக்க வரும். படிக்கப் படிக்க ஞாபகம் அதிக மாகும். பழய சட்டி, புதிய சட்டியிலும் சிறந்தது. பழய துக்கு எப்பொழுதுமே பெருமை அதிகம்.

4. இரவில் நன்ருகப் படித்தால் காலையில் சரியாக ஒப்புவிக்க வரும். இரவில் படித்த பாடத்தைக் காலையில் மறுபடியும் படிக்க வேண்டும். அப்போது நன்ருய் ஞாபகத்தில் தங்கும். இரவில் வராத கஷ்டமான பாடம் காலையில் சுலபமாய் வந்துவிடும். காலைப் படிப்பு நமது காலம்பூழுதுக்கும் உதவும். காலைப்பொழுது தங்கக்கட்டி.

5. எடுத்தது எல்லாம் படிப்பு. பார்ப்பது எல்லாம் படிப்பு. கண்ணுக்குத் தோன்றுவது எல்லாம் படிப்பு. கவ னிப்பது எல்லாம் படிப்பு. சமைப்பதும் ஒரு படிப்பு. உண்பதும் ஒரு படிப்பு. விளையாடி ஓடுவதும் ஒரு படிப்பு. தூங்குவதும் ஒரு படிப்பு. கோயிலுக்குப் போவதும் ஒரு படிப்பு. கடையில் சாமான்கள் வாங்கி வருவதும் ஒரு படிப்பு. செய்யும் வேலையும் ஒரு படிப்பு. தலை சீவி நெற் றியில் பொட்டு இட்டுக் கொள்வதும் ஒரு படிப்பு. சுத்த மாக இருப்பதும் ஒரு படிப்பு. பள்ளிக்கூடத்திற்குத் தவ ருமல் ஒழுங்காகப் போவதும் ஒரு படிப்பு. எந்த சங்கதி யும் ஒரு படிப்பு எல்லாமுமே ஒவ்வொரு படிப்பு. உல கமே படிப்பின் பெரிய பள்ளிக்கூடம்.

## இனி வரும் இந்தியா.



யோசனை யுள்ளவர்களின் கையில்தான் காங்கிரஸ் சபையும் இந்தியாவின் வருங்கால மும்இருக்கிறது. அவர்கள்தான் முடிவாக ஜன ங்களுக்கு யோசனைகூறி வழி காட்டுவோர்கள்.




## ரகுநாத சர்மா அல்லது

## மோசத்தால் வந்த நாசம்.

ஸ்ரீமான் தென்பாதி T. S. கனக சபை அவர்கள் இயற்றியது. விலை அணா 6.

ஆறணா கதையாயினும் கற்பனைத்திறன் ஸம்பூர்ணமாயிருக்கிறது. நடக்கும் விஷயங்களையே வைத்து நாவலாக எழுதுவதற்கு அதிக சாமர்த்தியம் வேண்டும். அவசியமான சொற்களை மட்டுமே கொண்டு இது ஆக்கப்பெற்றுள்ளது. உலக இயல்பை நன்கு விளக்குகிறது. இதன் ஆசிரியர் வெறும் புஸ்தகப்பூச்சி அல்ல. பெரிய கனத்த அநுபவ மூட்டையாயிருக்கிறார். முனிசிபல் பரிபாலனத்தில் நடக்கும் அநீதிகளை மிக்க ரஸமாக எடுத்துக் காட்டுகிறார். கடைசியில் தோன்றும் களவும் திடுக்கிடத்தக்க புதுமையே. மற்றபடி, இந்நூலில் காணும் நிந்தாஸ்பதமான விஷயங்களை நாம் ஏற்றுக்கொள்வதற்கில்லை. தாய் தந்தையரின் மனப்போக்கை அவ்வளவு ஹீனவிருத்தியாய்—கேவலமாய் எடுத்துரைத்தல் சரியாகாது. இந்நாவலின் நடை மிக இனிமை. பதஜோடினையும் நல்ல பக்குவமே.

***

## ஜோதிஷ தரங்கிணி.

1-2— பாகங்கள். எட்டயபுரம் ஸ்ரீமான் எஸ். குருகுஹதாஸப்பிள்ளையவர்களால் இயற்றப்பெற்றது. விலை ரூபா 1.

பிறர் உதவியின்றி ஜோதிஷ சாஸ்திரத்தைத் தாமே கற்பதற்கு எளிதாயுள்ள வகையில் இந்நூல் வெகு தெளிவாக வரையப்பட்டுள்ளது. ஜோதிட சாஸ்திர சம்பந்தமான அநேக விஷயங்கள் சார சங்கிரகமாய் விளக்கப்பட்டுள்ளன. சோதிடபலன்களின் உண்மையைப்பற்றி இதன் ஆசிரியர் எடுத்துக்கூறும் சரித்திரார்ஹமான உதாரணங்கள் அத்யத்புதமாய் இருக்கின்றன. பூர்வ வாசனாபலமே காரணமாகத் தாம் ஜோதிஷ சாஸ்திரத்தைக் கற்றுணர்ந்ததாக இதன் ஆசிரியர் கூறுவதும் ஒப்ப முடிந்ததே. இது ஒரு அரிய நூல். இதன் மூன்றும் பாகத்தையும் ஆவலுடன் எதிர்பார்க்கின்றோம்.

[இப்புஸ்தகங்கள் நமது "அமிர்த குணபோதினி" ஆபீஸில் கிடைக்கும்.

---

வருவன வருக ; வாரதன தொலைக. என்ன பிரமாத மிப்போது ? எத்தனையோ பாடு பட்டுள்ளோம்—இன்பம் விட்டுள்ளோம், தத்தளித்துள்ளோம், ஏமாறியுள்ளோம், துயர அலையில் நீந்தியுள்ளோம். ஏழைநெஞ்சே ! அஞ்சேல்.

---

அறிவாளிகளின் முகவிலாஸ சோபிதம் எவரையும் மகிழ்வித்து அடிமை கொள்ளவைத்துவிடுகின்றது. புதியயோசனைகளையும் உண்டாக்குவிக்கின்றது.




**மனைவியின் பதில் :—**

**கணவன் :—**இன்னும் ஏதாவது பேசினாயோ அப்படியே கழுத்தைப் பிசைந்து விடுவேன்.

**மனைவி :—**நீ கழுத்தைமட்டுமா பிசைவாய்; கொலையைக்கூடச் செய்வாய். உன் காமத்தீயில் விதவையான என் தாயை ஒரு நொடியில் சிக்க வைத்துக் கற்பழித்த சண்டாளனாகிய நீ எதைத்தான் செய்யமாட்டாய்?

***

**பிதாவும் புத்திரியும் :—**

**புத்திரி :—**அப்பா என் பாவாடையை ஏன்சிரத்தையாக எடுக்கிறீர்கள்?

**பிதா :—**ஒன்றுமில்லையம்மா, கொஞ்சம் கோவணத்திற்காகத் தான்.

**புத்திரி :—**போ அப்பா! அதைத் தொடாதீர்கள். அம்மாவின் ரவிக்கை, தலையணையின் உறை இவற்றில் ஏதாவது எடுத்துக்கட்டிக் கொள்ளுங்கள்!

***

**கடைசியில்வருகிறபேச்சு இரவல் இனும் கேட்பதே :—**

**புதிய நேசன் :—**தாங்கள் எழுதிய அந்தப் புஸ்தகத்தை நான் பார்த்ததேயில்லை. அதைத் தந்தால் வாசித்து விட்டுக் கொடுத்துவிடுகிறேன்.

**நூலாசிரியர் :—**என்னைக் கண்டு இனிக்கப் பேசுகிறவர்கள் கடைசியில் கேட்பது இரவல் புஸ்தகமே. எவராவது விலைக்குப் பெற்று இரண்டு காசைக் கொடுக்கக் காணோம்.

***

**பிறர் வீட்டில் புசிப்பு :—**

**அவர் :—**தங்கள் வீட்டார் வரும் வரையில், அந்த நண்பர் உங்களுக்குத் தெரிந்தவராயிற்றே, அங்கு புசிக்கக் கூடாதோ?

**இவர் :—**என் வீட்டார் புறப்பட்டுப் போகும்போது மூன்று தினத்துக்கு வேண்டிய அரிசி பருப்பு எண்ணெய் முதலிய சகலமும் அவர்களிடம் கொடுத்துமூன்று தினத்துக்கு எனக்கு சாதம் போடும்படி சொல்லியே சென்றார்கள். முதல் நாளில் சாதம் குழம்பு இவற்றைப் பக்கத்தில் வைத்துவிட்டுப் போய்விட, நான் புசித்து மறுசாதத்தைப் போடுவாரில்லாததால் இடது கையால் எடுத்துப் போட்டுக்கொண்டு உண்டு எழுந்தேன். இரண்டாம் நாள் எண்ணெய் வேண்டுமென, அப்படியே வாங்கித் தந்தேன். அன்று இலையில் வைத்த சாதம் போதவில்லை. மறுபடி வைப்பார்களென்று மிக எதிர்பார்த்தேன். காணோம்! அரை வயிறோடு எழுந்து விட்டேன். என்றால் பிறருக்குக் கஷ்டம் வேண்டாமென்று அதுமுதல் ஹோட்டலில் புசிப்பை வைத்துக் கொண்டுவிட்டேன். அவர்களும் மௌனமாகவே யிருந்துவிட்டார்கள். ஏன் புசிக்கவில்லை யென்று எவரும் கேட்கவில்லை நானும் வேண்டவில்லை.

---

*நம்மால் பிறருக்கு ஒரு காசு செலவு ஏற்படாதிருக்கும்படி பார்ப்பதே நம் வாழ்நாளின் முக்கிய நோக்கமாக இருக்கவேண்டும். நமது காசு பணம் மற்றவர்க்குச் செலவிடுவதில் மட்டும் லோபமின்றி தாராளமாக இருக்கக்கடவோம்.*

அவர் :—எப்படியாவது சொந்தமென நம்பிய மனுஷ்யர்களின் சுபாவம் தெரிந்ததே. அதுவே பெரிய லாபம்.

***

**மதவாதம் :—**

பாலு :—என்னிடம் தன் மதமே உயர்ந்ததென்று எவனும் பேச முடியாது. என்னை ஜெயிக்கவும் முடியாது.

வேலு :—அவர்கள் ஞானிகளின் வாக்கைக் கொண்டும், தங்கள் வேத நூலைக் கொண்டும் வாதிக்கையில், எதையும் பாராத நீ எந்த ஆதாரம் கொண்டு அதை மறுப்பாய்?

பாலு :—ஞானியும் மரித்துப் போனான். நானும் செத்துப்போவேன். சாகாதவர்களைக் கொண்டு வந்து பேசட்டும். அந்த மதத்தை ஏற்படுத்தியவர்களை எதிரில் வைத்துப் பேசட்டும். முதலில் அவர்கள் கடவுளை என் கண்ணுக்கே நேரே காட்டியாக வேண்டும். அப்போது தான் ஒப்புவேன்.

***

**ஆற்றங்கரைப் பேச்சு :—**

சேஷி :—அவள் எப்படி இந்த யௌவன காலத்தில் புருஷன் இல்லாமல் தனித்திருக்க முடியும்?

சுப்பி :—ஆமாம் பாவம்! உற்று நோக்கின் மிருதுவான அவளுடைய உறுப்புகளின் புதுத் தன்மையிலே, அவள் யௌவன காலத்திற்குரிய பஞ்சேந்திரியங்களின் வேட்கையும் மிஞ்சித் தவித்துக் கொண்டிருப்பவளாகவே காணப்பட்டாள்.

சேஷி :—எப்படியாவது அவள் மனம்போல் "சௌகரியமா" யிருக்கட்டும்!

***

**மாமியின் பதில் :—**

மனைவி :—(தன் கணவனிடம்) போன ஐப்பசி முதல் நான் முழுகவில்லை. இப்போது சரியாக மூன்று மாதமாகிறது.

மாமி :—(அதைக் கேட்டுக்கொண்டே வந்து) மறுபடியும் முழுகாமலிருக்கிறாளா? விடிந்துப்போச்சு! அவள் அதிகாரம் — சொந்தம் — இன்னும் அதிகமாய்விடும்! வீட்டுவேலை யெல்லாம் என் தலையில் விழுமே! இன்னும் என் மகளுக்கு இப்படி ஒரு காய்ப்பு காய்க்கக் காணோமே!

***

**சம்பளம் இன்னும் வரவில்லை:—**

வீட்டுக்கு வந்த விருந்தினர் :—எங்கேயப்பா எவரையும் வீட்டில் காணோம்? ஐயோ! பசித்திருக்கிறாயே; உன் முகமே காட்டுகிறதே! நாங்கள் சமைத்துப் போடட்டுமா?

வீட்டுக்காரன் :—உங்களுக்கு அந்தப் பிரயாசை வேண்டாம். சம்பளம் இன்னும் வரவில்லை. வந்த பிறகு வரும்படி என் மனைவிமக்களை அவள் தாய் வீட்டுக்கு அனுப்பிவிட்டேன். வீட்டில் ஒரு அரிசிமணியும் கிடையாது. கடன் தருவோரும் இல்லை.

***

**குதர்க்கத்திற்குப் பதில் :—**

அவர் :—பட்டினத்தடிகள் சுத்த அஞ்ஞானி. அவர் பாட்டிலும் இரண்டு வரி சரியில்லை.

இவர் :—ஆம், அஞ்ஞானிதான். அவருக்குப் பாடவே தெரியவில்லை. நான் இப்படி ஒத்து ஆம் ஆம் என்று பேசிவிட்டால்மேலே தங்களின் குதர்க்கப்பேச்சு கிளம்பாதல்லவா? பேச்சும் இவ்வளவில்முடிந்துவிடுமல்லவா?

---

நந்தமிழ் மொழியில் நடைபெறும் நூல்களெல்லாம் மூன்று பிரிவினவாம். (1) சங்கமருவிய நூல்கள். (2) இடையிற்றோன்றிய இதிகாச புராணக் கதைகள். (3) ஆங்கில நூற்றுணைகொண்டு செய்யப்படுவன.

# மிதிக்கப்பட்ட புழு!

[அந்தப் புழு துடி துடித்துச் சொல்லும் ஆத்திர மொழிகள்.]

மிதியுண்ட நெஞ்சு வேகுவதும் வீணாகுமா?
தன்னை மதித்தவன் மீதே தன் உட்பகை?
முதலில் உதவியவனை உலகு மறக்கின்றது.
புகழ்—மதிப்பை மிதிப்பவர் மஹா பாதகர்.
நலம்செய்து பின்மனம் நோகல் கொஞ்சமா?
செய்த நன்றியை மறப்பின் தெய்வமேது?
பாவி கொடுமை பாலும் புளிக்கிறதே ஈசா!

இப்போது இனிக்கவே பேசிப்—பின் பகைக்கிற வஞ்சகரது கபட குணம் முதலில் தெரிவதே மிக மேல். விழித்து விலகிவிட அது ஒரு துணை.

இன்று மிகு அன்பர் இவரே பின்நம்எதிரி
வஞ்சக மனமென முதலில் தெரிகிறதா?
மடி பிடித் துறவாடியே பின் மூர்க்க ராவர்
சிரித்தே கலகப்படுத்தி பிரிவு காட்டுவார்
சங்கதி மிகு அற்பம்; வெகுபகை சாதிப்பர்
நம்மை ஏசுவாருடன் கூடி இடர் புரிவர்
மிக உறுமி நமது மானம் சிந்த வைப்பார்
வம்பு வாய் கொண்டு திரிவாரை நீ ஒழி
நலமிலா நட்பு நாலெட் டிருந்தென்ன?
நீசர் பின் பழிபாவ மடையாது போகார்
ஏமாறியவரைப் பின் ஏமாற்ற முடியாது

இங்கு பகை, அங்கு உறவு, அது வஞ்சகம்.
தீது செய்த திமிருக்கு தெய்வம் கூலி தரும்.
மிதிபட்ட புழுவும் பிறகு தன் தலை தூக்கும்.
ஏமாறுவதில் ஏற்படுகிற சக்தி வெகு பெரிது.
அகதிக்கு ஈசனே துணை. தர்மமே ஜெயம்.

# கால சக்கரத்தின் போக்கு.



கிளைகள் வெட்டப்பட்ட மரம் காலக்கிரமத்தில் திரும்பவும் வளருகிறது. இலேயே கிடைக்கப்பெருத நிர்வாணமான செடி மலர்களாலும் கனிகளாலும் புதுப்பிக்கப்படுகிறது. கடுமையான புண்பட்ட பிராணியின்நோவு விட்டுவிடப் பெறுகிறது. மிகவும் வறண்டுபோனநிலமும் கொஞ்சம் ஈரமாக்குகிற தாரைகளே உட்கொள்ளுகிறது. ஆகவே, கலங்கலிலிருந்து தெளிவுக்கும், மேலான பாக்கியத்திலிருந்து இழிவானதிற்கும் காலம் சுழன்றும், யோகம் ஒழுங்காக மாறுதலடைந்தும் செல்கின்றன.

ஃ

அதிர்ஷ்ட ஆழிஎப்பொழுதுமே பொங்குகிறதில்லே. அது மிகவுந்தாழ்வான வற்றுதலுக்கும் தன்னுடைய தயைகளேக் காட்டுகிறது. அதனுடைய காலத்துக்கு வரவும், போகவும் சமமான காலப்பகுதிகளிருக்கின்றன. அதனுடைய நெசவுத்தறி நேர்த்தியான புடவையும் முரடான புடவையும் நெய்கிறது. ஆகவே, இன்பம் முடிவுக்கு வாாதபடி அவ்வளவு மேன்மையாயும், எதிர்பாராத சம்பவங்கள் மெல்லியதாகத் திருத்த முடியாதபடி அவ்வளவு கடினமாயும் இருக்கிறதில்லே.

எப்பொழுதும் இலேயுதிர்வதும் அல்லது உண்டாவதுமில்லே. முடிவில்லாத இரவுமில்லே. இன்னும் நித்தியமான பகலுமில்லே. மிகவும் விசனகரமான பறவைகளும் பாடுவதற்கு உற்ற காலம் பெறுகின்றன. மிகவுங் கொந்தளிக்கிற கடுங்காற்றும் சீக்கிரத்தில் அமைதிக்குச் சாந்தப்படுகிறது. இப்படி வருகிற மாறுபாடுகளுடன் மனிதன் மேலெழுதலுக்கு நம்பவும், கீழ் விழுதலுக்கு அஞ்சவும் கடவுள் எல்லாவற்றையும் பதப்படுத்துகிருர்.

ஃ

ஒரு சந்தர்ப்பம் வெற்றி பெறலாம். அவ்வெற்றியே துரதிர்ஷ்டத்திஞல் இழக்கப்படலாம். விசாலமில்லாத கிணற்றை சிறுமீன் ஏற்றுக்கொள்ளுகிறது. சிலவற்றை எல்லாரும் கடந்திருக்கலாம். ஆனல், எல்லாவற்றையும் ஒருவரும் கடந்திருக்கிறதில்லே. சிலர் தங்களுக்கு அவசியமானதெல்லாம் பெறுகிருர்கள். ஆனல், ஒருவரும் தமக்கு விருப்பமானவைகளெல்லாவற்றையும் பெறுகிறதில்லே. ஆகவே, முட்டுப்படாத இன்பம் ஒருவருக்கும் நேரிடுகிறதில்லே. மிகச்சிறுகப் பெற்றவர்கள் சிலரிருக்கிருர்கள். மிக கிரம்பப் பெற்றவர்களோ ஒருவருமில்லே. ஆனல் தமக்கு வேண்டியதற்கு மேலும் அதிகமாய்ப் பெற்றவர்கள் பலர் இருக்கிருர்கள்.

ஆ. பேரியநாயகம்.

---

நான் உன்னிடம் கொண்டுவந்து தந்து, பிறகு உன்னைக்கேட்டு, நீ சிறிதே தர, நான் அதிகம் விரும்ப, நீ முணுமுணுக்க—இந்தத் தொல்லேயெல்லாம் ஏன்? நானே அதை என்னிடம் வைத்துக்கொண்டு எனக்கு வேண்டும்பொழுது தாராளமாய் என் பிரியம்போல் எடுத்துக்கொள்கிறேன். நீ சிறிதாகத் தரவோ, உனது முகஞ் சுளிக்கவோ அப்போது முடியாதன்றே?

# ழகர—ளகர பேதங்கள்.

இருவகை மொழிகளின் எழுத்தும், உச்சரிப்பும், கருத்தும் வேறுபாடா யிருப்பினும், திருத்தமற்ற சிலர் க்ஷணந்தோறும் அவைகளைப் பிறழ்த்திப் பேசுகிறதுமன்றி எழுதுவதிலும் அப்படியே செய்துவிடுகிறார்கள்.

[மாணுக்கர் தேர்ச்சியடையவேண்டி உபாத்தியாயர் இவ்விருமுறை மொழிகளுஞ் சொல்லிக் கருத்தை அறிவிக்க வேண்டும்.]

1. அகழி—அகழ். அகளி—தாழி.
2. அழது—சர்க்கரை, வனப்பு. அளது—கார்த்திகை நாள், அன்னப் பேடை.
3. அழித்தல்— கெடுத் தல். அளித்தல் — ஈதல், காத்தல்,நெருங்கல்.
4. ஆழல்—ஆழ்கல், கறையான். ஆளல்—ஆளுதல்.
5. ஆழி—கடல்,கரைப் பொது, சக்கரம்—தேருருளை, மோதிரம், யானைக்கை நுனி, வட்டம். ஆளி—ஆளுவோன், ஒழுங்கு, கரைப் பொது, சிங்கம் சிங்கவிராசி, யாளி.
6. இழிவு—ஈனம்,குற்றம், கேடு, தாழ்வு, நிந்தை, பள்ளம். இளிவு—இழிவு.
7. இழை—ஆபரணம், கலத்தலைச் செய், இழை யென்னே வல், நூற்கிற நூல். இளை—இளமை, இளைத்தலைச் செய் யென்னேவல், காவற்காடு, மேகம், வேலி, இலக்குமி, கோழை, பசு.
8. இழைத்தல்— கலப்பித்தல், செய்தல். இளைத்தல்— மெலிதல்.
9. உழி—இடம், எழனுருபு, பக்கம், அளவு. உளி—இடம், எழனுருபு, ஓர் கருவி.
10. உழை—உழையென்னேவல், மான், யாழினோர் நரம்பு. வைகறை. உளை—ஆண் மயிர், உளையென்னேவல், ஒலி, குதிரை முதலியவற்றின் பிடரி மயிர், புறமயிர், பேசலாலெழு மொலி.
11. உழைத்தல்—பிரயாசப்படுதல்,வேலை செய்தல். உளைத்தல்—அழைத்தல், ஒலித்தல், வருந்தல்.
12. ஒழித்தல்—அழித்தல், எழுச்சி, கொல்லல். ஒளித்தல்—பதுங்கல், மறைத்தல்.
13. கழகம்-கல்வி, சூது, படை மல் இவை பயிலுமிடம். களகம்—பெருச்சாளி.
14. கழங்கம்—சூதாடு கருவி. களங்கம்— அடையாளம், கறுப்பு, குற்றம், நீலம், மாசு.
15. கழி—உப்பளம்,கழியென்னேவல்,மிகுதி களி—களிப்பு, களியென்னேவல், கள், குழம்பு, செருக்கு,

---

"புதுவோன் பின்னைப் போனதென் நெஞ்சம்! என்று காண்பேன் அவன் வடிவம் இனி நான்!"

மயக்கம், மாவாற் கிண்டிய களி.

16. கழித்தல்—நீக்குதல். களித்தல் — இன்புறல், மதர்த்தல், மிகவுவத்தல்.

17. கழிப்பு—கழித்தல், குற்றம். களிப்பு—இன்பம், உள்ளக் குறிப்பு.

18. கழை—கரும்பு, புனர்பூசம், மூங்கில். களை—அயர்வு, அழகு, ஒளி, களையென்னேவல், குற்றம், காந்தி.

19. காழகம்—ஆடை, கடாரமென்னுமூர், கருமை, சோறு. காளகம் — எக்காளம், மருக்காரை.

20. காழி—சீகாழி. காளி—அட்டாதசவுபபுராணத்தொன்று, காளி, சிங்கம், பார்வதி.

21. கிழவி—தலைவி, மூப்புடையவள். கிளவி—சொல்.

22. கிழி—எழுதுபடம், கிழியென்னேவல், கீற்று, நிதிப்பொதி. கிளி—கிள்ளை.

23. குழகம்—அழகு. குளகம்—ஆழாக்கு, குற்றெழுத்துத் தொடர்ந்த செய்யுள், மரக்கால்.

24. குழகு—அழகு. குளகு—இலைக்கறி, இலையுணும் விலங்குணவு.

(மற்றவை மற்றதில்.)

## விலை குறைத்துக் கேட்போருக்குச் சொல்லவேண்டிய பதில்.

இன்றைக்கு எனது விலை விஷயத்தில் கண்டிப்பாயிருந்து என் சாமானுக்குச் சரியான கிரயம் நான் பெறுவிட்டால், நாளை என் கையில் குறைகிற பணத்திற்கு ஒரு காசு நீங்கள் சும்மா தருவீர்களா? இப்பொழுது விட்டுக்கொடுக்கும் பணத்தில் பிறகு ஒரு காலணாவாவது நீங்கள் எனக்குக் கொடுக்க முடியுமா? நீங்களும் எனக்குத் தரவேண்டாம். நானும் விலை குறைத்துத் தந்து நஷ்டப்பட்டு இப்பொழுது இழந்து போகிற பணத்திற்குப் பிறகு எங்கவும் வேண்டாம்.

அவர் யார்? உலக இன்ப துன்ப அநுபவங்கள் நன்கு கண்டு தேறிய பழய மாப்பிள்ளை. இவர் யார்? பழய மாப்பிள்ளை முந்தியே கண்டு கசந்து விட்டதை இனிமேல் தானாகவே காணப் புகுந்திருக்கிற புதிய மாப்பிள்ளை!

சும்மா சும்மா வந்து நேசம் பிடிப்பவனை ஒரு பத்துருபாய் கடன்கேட்டுவிடு, அவன் வராது நின்றுவிடுவான். இன்னும் சிலரை அவர்கள் வீட்டிவிருந்தும் சாப்பாடு கொண்டுவரச் சொல். முதல் நாள் ஒருசமயம் கொண்டு வந்தாலும், பிறகு இதேதடா பெரிய சங்கடம் என்று மறுநாள் வராமலே ஜாடையாக நின்றுவிடுவார்கள். அத்துடன் அவர்களின் தொல்லையும் தீர்ந்தது!




# சந்திரசேகரனின் கத்தி!



"நானும் இந்த வீட்டிற்கு வந்து இரண்டு வருஷங்கள் ஆயிற்றே; அந்தமூடப்பட்டிருக்கிற அறையைப் பார்க்கவேண்டுமென்று பலதரம் சொல்லியும் ஏன் மறுக்கிறீர்கள்? அந்த அறையில் அப்படி என்ன விசேஷம் இருக்கிறது? எனக்கு அதைக் காண்பிக்கக் கூடாதா?"

"சாரதா! நான் அதை ஒருபோதும் உனக்குக் காட்டமுடியாது. நீயும் அதைப்பற்றி என்னைக் கேட்கக் கூடாது. இதை என்றைக்கும் மனதில் கண்டிதமாய்ப் பதிய வை."

என்று சந்திரசேகரன் மிக்க வருத்தத்துடன் கூறினன். சாரதாவும் "இனி தங்களின் மனதிற்கு வருத்தமுண்டாகும்படி நான் நடவேன்" என்று சொல்லி மன்னிப்பு கேட்டுக் கொண்டாள். இந்த ஸம்பாஷணை நடந்த ஒரு வாரத்திற்கெல்லாம் சந்திரசேகரன் சென்னைக்குப் புறப்படுவதானன். போகும்பொழுது தன் சாவிகளின் கொத்தைச் சாரதாவினிடம் தந்து, அந்த மூடப்பட்ட அறையை மட்டும் பார்க்கவேண்டாம் என்று கண்டிப்பாகச் சொல்லிச் சென்றுன்.

ஃ

சாரதாவுக்கு அந்த மூடப்பட்ட அறையின்மீதே ஞாபகமாய் இருந்ததால் சந்திரசேகரன் சென்ற மூன்றும்நாள் எவ்விதமும் அந்த அறையைத்திறந்து பார்க்கவேண்டுமென்று அதன் பூட்டை சந்திரசேகரனின் சாவியால் திறந்தாள். ஆயினும், அவள் மனம் நடுங்கியது. என்ன பயங்கரக் காட்சி அந்த அறையிலிருக்குமோ என அச்சமுற்றுள். திறக்காமல் மூடிவிடவும் எண்ணினள். பிறகு துணிந்து திறந்தே பார்ப்பதென்ற முடிவுக்கு வந்தாள். அந்த சமயம் கதவை யாரோ தட்டவும் நடுக்கத்துடன் பூட்டைப் பூட்டிவிட்டு வெளியில் வந்து கதவைத் திறந்தாள். தபாற்காரன் ஒரு கடிதம் தந்து சென்றுன். அது சந்திரசேகரனின் கடிதம். தான் வந்தவேலை முடிந்துவிட்டதால் இரவு புறப்பட்டு மறுநாள் பகல் 12-மணிக்கு வருவதாக எழுதியிருந்தான். சாரதா கடியாரத்தைப் பார்த்தாள். $10\frac{1}{2}$ மணியாக இருந்தது. அவர் 12-மணிக்கு வருவதற்குள் அந்த அறையின் ரகசியத்தை அறிந்து விடவேண்டுமென்று கதவைத் தாள்ப்பாளிட்டு விட்டு, ரகசிய அறையைத் திறந்தாள்.

ஃ

திறந்து உட்சென்றதும் அங்குள்ள பயங்கரமான காட்சியைக் கண்டு அலறிக்கொண்டு கீழே விழுந்தாள். பிறகு நடுங்கிக்கொண்டு வெளியில் வந்து அறையின் கதவை மூடிப்

பூட்டிவிட்டாள். எனினும், அந்த அறையி லிருந்த விபரீதக் காட்சி அவள் மனத்தில் பதிந்து வெகு பயங் கரத்தைக் கொடுத்தது. இதற்குள் மணியும் 12-ஆக, சந்திரசேகரனும் பெட்டியுடன் வீட்டிற்குள் நுழைந் தான். சாரதா பிரியமாய் உபசரித் தாள். எனினும், அவள் உள்நடுக்கம் தீரவில்லை. சந்திரசேகரனிடம் சாவி களைக் கொடுத்துவிட்டு அடுத்த வீட் டிற்குச் சென்றாள். அவ்விதம் சென் றாலாவது தன் மனநடுக்கம் சற்றே தீராதாவென்பது அவள் கருத்து.

ஃ

சாரதா சென்றதும், தனது நண் பனின் ஞாபகம் உண்டாகவே, சந்திர சேகரன் வெளிக் கதவை மூடிவிட்டு வெகுநாளாய்ப் பார்க்காதிருந்த ரகசிய அறையைத் திறந்தான். அங்கிருந்த படியே தேம்பித் தேம்பி யழுது கண் ணீர் பெருக்கினான். என்னைக் கை விட்டாயே 'ராகவா' என்றான். பிறகு அவனுக்கெதிரில் கிடந்த ஒரு கடிதத் தை எடுக்கப்போக, அது நேற்றுச் சென்னையிலிருந்தும் சாரதாவிற்குத் தான் எழுதித் தபாலில் போட்ட கடி தமாக இருந்தது. சாரதா தன் கட் டளையைமீறி அறைக்குள் வந்து நடுங் கிப் போயிருக்கிறாளென்றும், அதனா லேயே வீட்டிலிருக்கப் பிடிக்காமல் பக்கத்து வீட்டிற்குச் சென்றிருக்கிறா ளென்றும் தெரிந்து கொண்டான். அதே சமயம் நூலாசிரியர்களுக்கு உண்டாகிற திடீரென்று தோற்றும் புது யோசனையைப் போல் அவன் மனத்திலும் ஒரு குறிப்பான சிந்தனை உதய மாயிற்று. அச்சிந்தனையின்படி யே செய்வதென்றும் தீர்மானித்தான்.

ஃ

உடனே அறையைப் பூட்டிவிட் டுக் கனத்த கோபத்துடன் ஒரு நாற் காலியில் உட்கார்ந்தான். சாரதாவும் அந்த சமயம் உள்வர, உடனே ஆத்தி ரத்துடன் எழுந்து இன்று உனக்கு வந்த என் கடிதம் எங்கே யென்று வினவினான். சாரதா அந்தக் கடிதத் திற்காக முன்பே தேடிப்பார்த்துக் காணாமல் கவலை கொண்டிருந்தா ளாதலின், இப்போது அதையே சந் திரசேகரன் கேட்டதும், அந்த ரக சிய அறைக்குள் அக்கடிதம் தவறி விழுந்திருந்து, அதனால் தான் அறை யைப் பார்த்தது தெரிந்து விட்டதோ வென நடுங்கினாள். சந்திரசேகரன் கோபத்துடன் தன் பெட்டியைத் திறந்து பளபளப்பான கூரிய கத்தி யொன்றை எடுத்துக் காட்டி, உண் மையைச் சொல்லுகிறாயா வெட்டட் டுமா என்றான். சாரதா நடுக்கத்து டன்தான் அறைக்குள் அன்று சென்ற துண்டென்றும், தான் பயந்து கீழே விழுகையில் கடிதமும் ஒரு சமயம் அங்கு விழுந்திருக்கலா மென்றும், தன்னை மன்னிக்க வேண்டுமென்றும் காலில் விழுந்து கெஞ்சினாள்.

ஃ

சந்திரசேகரனோ அவளைப் பிடித் துத் தள்ளி, என் கட்டளையை மீறுவ தற்கு உனக்கு என்ன அவ்வளவு தைரி யம் என்று கடுஞ்சினத்துடன் உறக் கப்பேசித் தன் கத்தியை ஓங்கினான்.

சாரதா அலறிக்கொண்டு நான் தெரியாமற் செய்தேன். பிழை பொறுக்க வேண்டு மென்று மறுபடி யும் அவன் காலில் விழுந்தாள். கண் ணீர் ஆறாகப் பெருகிற்று.

---

அதிகமான விருந்துபசாரங்களோ—அவ்வளவுக்குச் செய்து ஆக்கிக் கொட்டினோமே யென்ற பேச்சைத் தொட்டுக்கொள்ளும். சாதாரணமான சமையல் உபசாரங்களோ இடுபவர்க்கும் உண்பவர்க்கும் சாந்த குணம் நல்கும்.

சந்திர சேகரனுக்கோ வரவரக் கோபம் அதிகமாயிற்றே தவிரக் குறையவில்லை. என் கட்டளையைமீறி அந்த அறையைத் திறந்த குற்றத்திற்காக இன்னும் கால் மணி நேரத்திற்குள் உன்னைக் கொல்லப்போகிறேன். நீ அதற்குத் தயாராக இரு என்று சொல்லிவிட்டு வெளிக்கதவை மூடித் தாழ்ப்பாளிட்டான். சந்திர சேகரனின் முகம் சண்டாளனைப் போலும் ஒரு கொலைகாரப் பாவியைப் போலுமிருந்தது.

சாரதா என்ன செய்வாள்? நடுங்கியபடியே கடைசி கட்டிற்குச் சென்றாள். கதறினாள், துணை எவருமில்லை.

"ஆயிற்று? இன்னும் பத்து நிமிஷங்களே இருக்கிறது" என்று சந்திரசேகரன் கத்தினான். சாரதா பின்னும் அஞ்சியவளாய் மாடியின்மீது ஏறி உதவிக்கு எவரையாவது அழைக்கலா மென்று தெருவில் செல்லுகிறவர்களைக் கவனித்தாள். அதற்குள் சந்திரசேகரன் இன்னும் ஐந்து நிமிஷங்களே இருக்கிற தென்று கத்தினான். வீட்டிற்குள் இருந்தபடியே மாடியில் சாரதா நிற்பதையும் தவிப்பதையும் ஒருபக்கம் நன்றாய்க் கவனித்தபடியே இருந்தான். இனி மூன்று நிமிஷமே என்று கத்தினான் சந்திர சேகரன். பிறகு இரண்டே நிமிஷங்கள் என்றான். உன்னைக் கொல்லாது விடப் போவதில்லை யென்று கர்ஜித்தான். சாரதா மிகவும் தத்தளித்தாள்.

ஃ

சாரதா தனக்கு மரணகாலம் நெருங்கி விட்டதென்று தெரிந்து கொண்டாள். அங்கு வீதியில் அந்த சமயம் வந்துகொண்டிருந்த போலீஸ் கான்ஸ்டேபிளைக் கண்டாள். உடனே ஆத்திரத்துடன் அவரை ஓடிவரும்படியும், தான் கொலை செய்யப்படப் போவதாகவும் சைகை காண்பித்து அழைக்கவும், அவர் தக்ஷணமே சாரதாவின் வீட்டுக்கதவு மூடியிருப்பதை அறிந்து பக்கத்து வீட்டிற்குள் சென்று மாடியில் ஏறினார். அதற்குள் ஒரு நிமிஷமே பாக்கி என்று சந்திரசேகரன் கூறிவிட்டு கத்தியுடன் மாடியின் முதற்படியை நெருங்கினான்.

ஃ

சாரதா சந்திரசேகரனைக் கண்டதும் பதை பதைத்து நடுங்கியவளாய் அலறினாள். சந்திரசேகரனோ இரக்கமே யற்ற சண்டாளனாய்க் கத்தியை ஓங்கி அவள் கழுத்தில் போட்டு விட்டான். அதே நிமிஷம் போலீஸ் சேவகர் சாரதாவின் மெத்தையிற் குதித்து சந்திரசேகரனைப் பிடிக்கமுயல, அதற்குள் கத்தி சாரதாவின் கழுத்தில் விழுந்துவிட்டது! அதுமட்டுமா? சாரதாவின் தேகத்திற் பல இடங்களிலும் குத்திவிட்டான் சண்டாளன். இப்படியும் உண்டா ஒரு மூர்க்கன்!

ஃ

சாரதா பிரமித்து நின்றாள். சந்திரசேகரன் கடகடவெனச் சிரித்தான். கொலையாளியின் முகமும் கோபமும் காணுதொழிந்தது. கான்ஸ்டேபிள் திடுக்கிட்டவராய் சந்திரசேகரனின் கூர்மையான கத்தியைப் பார்த்தார். அது ஒரு கனத்த காகித அட்டையாய் மேலுக்குமட்டும் பளபளப்பான ஒருவித காகிதம் ஒட்டப்பட்டு ஒரு உண்மையான கத்தியைப் போலவே விளங்கிற்று. கான்ஸ்டேபிள் இதென்ன விபரீதம், இவ்விதமா பயமுறுத்துகிறது என்று புன்னகையுடன் வினவினார்.

ஃ

சந்திரசேகரன் சாரதாவைத் தடவிக்கொடுத்து இக்கொடுமைக்கு என்னை மன்னிக்கவேண்டும். நேற்று சென்னையில் சினிமாவுக்கென்று படம் பிடிப்பதற்காக ஒரு கதையைத் தயாரித்து, அதில் தன் கணவனின் கோபத்திற்காளாகிக் கொல்லப்படப் போகும் பெண்ணைப் போல என்னை நடிக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டனர். அது இனி மூன்று தினத்தில் நடக்கும். அந்த நடிப்பை எவ்விதம் பிரத்தியக்ஷக் காக்ஷிபோல் நடிப்பதென்று நேற்றுமுதல் யோசித்துக்கொண்டேயிருந்தேன். உன்னை விட்டுப் பிரிந்தது மனதிற்குப் பிடிக்காததால் உடனேபுறப்பட்டு வந்தேன். ரகசிய அறையில் நான் அனுப்பிய கடிதம் கிடந்ததால், நீ அறையைத் திறந்திருக்கிருயென்று கண்டுகொண்டேன். அந்த சமயம் திடீரென்று என் மனதில் ஒரு புதிய யோசனை எழுந்தது. அந்த அறையைத் திறந்ததற்காக உன்னைக் கொன்று விடுவதாகப் பயமுறுத்தினுல் நீ எப்படியெல்லாம் நடுங்குகிருயோ அதை இயற்கையிலேயே நேருக்கு நேராகக் கண்டு கொண்டால், பிறகு அந்த விதமாக நான் பெண் வேடத்துடன் நடிப்பதற்கு சுலபமாயும் பிறர் வியக்கும்படி சிலாக்கியமாயும் இருக்குமென்று தீர்மானித்துக்கொண்டேன். இந்தக் கோபாவேசம் ஒருசமயம் கெடுதியாய் முடிந்துவிடாமலிருக்க, ஜெர்மனியில் நாடகத்திற்கென்றே தயாரிக்கப்பட்டு, சினிமாகம்பெனிக்கு வந்திருந்த இந்த விசித்திரமான காகித அட்டைக்கத்தியை எடுத்துக் கொண்டு இவ்வளவு ஆவோரம் செய்து ஒரு பெண்ணினது இயற்கையாகிய நடுக்குதல்களை நேராகக் கண்டு கொண்டு விட்டேன். இனி என் வாழ்நாளில் இவ்வித அக்கிரமம் செய்யேன். என்னை மன்னிப்பாயா என்ருன்—சாரதாவை நோக்கி சந்திரசேகரன்.

ஃ

"மனஸ்பூர்வமாய் மன்னிக்கிறேன். ஆனுல், நான் உண்மையாகவே நடுங்கிவிட்டேன்" என்ருள் சாரதா.

"எனக்கு நீ அப்படி நடுங்கிய உண்மைச் சரக்குதானே வேண்டும். இந்த நடிப்பில் எனக்கு 400-ரூபாய் கிடைக்கும். அப்படியே கொண்டு வந்து காசிமாலை செய்து போட்டுவிடுகிறேன்" என்ருன் சந்திரசேகரன்.

"சந்தோஷம். அந்த ரகசிய அறையில் அவ்வளவு பயங்கரக் காட்சிகளை என் வைக்கவேண்டுமோ? எதற்காக அந்த அறை மூடியபடியே கிடக்க வேண்டுமோ?" என்ருள் சாரதா.

"அதுவா? அதையும் இப்பொழுது சொல்லி விடுகிறேன். உன்மீது எனக்கு எவ்வளவு உயிருக்குயிரான ஆசையோ, அதைவிடப் பதின்மடங்கு என் நண்பனுன விஜயராகவன் மீது வைத்திருந்தேன். அவன் ஒரு மந்திரவாதியிடம் மந்திரங்கள் கற்றுக்கொண்டு பேய் ஓட்டுதல் முதலியவைகளில்மிகவும் சாமர்த்தியசாலியானுன். அவன் அந்த மூடப்பட்டிருக்கும் அறையில் பயங்கரமான காளி, சாமுண்டி, முனீஸ்வரன், பூதம் முதலிய உருவங்களை வைத்துக்கொண்டு தன்னிடம் வருகிறவர்களை நடுங்கப் பண்ணியும், தன்னை மந்திரவாதியென நம்பிக்கை வரும்படி செய்தும், பேயோட்டுதல் முதலான வேலைகளை

---

என்னென்னவோ வேதாந்தம் சொல்லுகிற நீ உள்ளபடியே உன்னையேனும் உணர்ந்தாயில்லையே. உன்னை நீ யுணரப்பெற்ருல் உன் தலைவனையும் நீ யுணர வல்லவனுவாய், பேசுவது வேதாந்தம்; இருப்பதோ உலகப் பற்றில்!

நடத்தினுன். நான் இந்த நீசத் தொழிலை வெறுத்து அதைவிட்டு விடும்படி வற்புறுத்தினேன். அதற்கு இணங்கித் தன் அறையைப் பூட்டி விட்டு வேறு வேலை கற்றுவரப் பம்பாய்க்குச் சென்றவன் மூன்று வருஷங்களாய்த் திரும்பி வரவேயில்லை. கடிதமும் இல்லை. அவனைப் பிரிந்த துக்கத்தால் அறையின் கதவைத் திறப்பின் எங்கு அவன் ஞாபகம் வந்து வருத்துமோ என்று பூட்டிட்டபடியே வைத்திருந்தேன். நீ அந்த அறையைப் பார்த்தால் அங்குள்ள பயங்கர ரூபங்களைக் கண்டு பயப்படுவாயென்றும், பிறகு அவனது பயங்கர உருவங்களையெல்லாம் உன் அச்சத்தைப் போக்க வீட்டைவிட்டு வெளியேற்ற நேரிடுமென்றும் எண்ணியே அதை நீ பார்க்கக் கூடாதென்று தடுத்தேன். இன்று மாலைக்குள் அவன் சாமான்களையும் உருவங்களையும் வேறு வீட்டிற்கு அனுப்பி அறையைத் திறந்துவைத்து விடுகிறேன்'' என்ருன் சந்திரசேகரன்.

***

இந்த சமயம் வீட்டின் அருகில் வண்டியொன்று வந்து நிற்க, அதினின்றும் இறங்கியவனை சந்திரசேகரன் மாடியிலிருந்தபடியே பார்த்து, அதோ என் உயிர் நண்பன் விஜயராகவனும் வந்துவிட்டான் என்று கூறிக்கொண்டு கீழிறங்கி கதவைத் திறந்து தன் நண்பனை ஆவலுடனும் தழுவிக்கொண்டான். கான்ஸ்டேபிள் வியப்புடன் அறையைப் பார்த்துவிட்டு விடைபெற்றுச் சென்ருர். அன்றே அந்த அறையிலிருந்த சாமான்களை விஜயராகவன் தூள்தூளாக்கி எறிந்து அறையைக் காலிசெய்து விட்டுத் தான் புதிய வேலையொன்று கற்றுக்கொண்டுவந்து விட்டதாயும், இனி இந்தப் பாழும் மந்திரங்கள் உருவங்கள் எதுவுமே தனக்குத் தேவையில்லையென்றும் கூறினுன்.

ஃ

இது நடந்து ஓராண்டாயின. இப்பொழுது சாரதா தன் கழுத்தில் காசுமாலை மட்டுமல்ல, கடியாரகொலுசுடனும் இன்னும் மற்ற ஆபரணங்களுடனும் பிரகாசித்துக் கொண்டு நிற்கிருள். சந்திரசேகரன் அளவற்ற காதலுடன் அவளோடு இல்லறம் நடத்தி வாழ்ந்து வருகிருன். விஜயராகவன் ''எலக்டிரிக்'' தொழிலில் வல்லவனுய் கனத்த லாபம் அடைந்து சந்திரசேகரனின் நட்பைப் பெருக்கிக்கொண்டு ஆநந்தமா யிருக்கிருன். மலைபோல் வந்த பெரிய விபத்து பனிபோல் நீங்கியது வியப்பன்றே?

N.C.G. ஸ்ரீநிவாச வரதாச்சாரியார்.

## தனக்கே தெரியும் தன் சங்கதி!

பேச்சுகள் எத்தனை உயர்த்திப் பேசினுலும், தன் இகழ்ச்சிச் செயலைத் தனக்குத் தெரியாமல் முழுதும் மறைக்கத் திரையேதுங் காணும்! நாற்றத்தை யடக்க இயலுமோ? ஊறும் புழுவும், உள்ளத்துக் கோணலும் நேர்படுகின்றதே தன் கண்ணுக்கெதிரே!




1. உடை மதிப்பு :—சாதாரண ஆடையுடன் சென்றால், அவர் பெருந் தன்மை வாய்ந்தவராயினும் மதிப் பில்லை. ஸர்ட்டு—கோட்டு—செண்ட் டுக்கே மதிப்பு.

2. கடைசியில் ஓட்டம் :—வியா பாரிகளிடம் ஈரெட்டாக நகைகளைப் பெற்று விற்று வந்த தொகையைப் பாங்கியில் போட்டுவிட்டு, ஒரு வாரத் தில் பணம் வருமென்று வியாபாரிக ளிடம் சொல்லி, பிறகு மறுபடியும் நாலுநாள் ஆகும் போலிருப்பதால் தானே பணம் கொடுத்துவிடுவதாய்க் கூறி, தனது சொந்தப் பணத்தி லிருந்து தருவதுபோல் பாங்கிக்கு 'செக்' கொடுத்துவிடுகிறான். இதி லிருந்து அவனைப் பலர் நம்பிவிடுகின் றனர். அவனும் வெகு நாணயமாய் நடந்து, சமயம் பார்த்து அகப்பட்ட வரையில்பலமாய்ச் சுருட்டிக்கொண்டு புதுச்சேரிக்கு ஓட்டம் பிடிக்கிறான்.

3. வீட்டிலிருந்து கடிதம் :— படியாப் பெண்ணை மணந்தோர் வெளியூரிலிருக்கையில் அவள் கைப்பட டக் கடிதம்பெற இயலாது ஏமாறு கின்றனர். இது ஒரு கண்ராவி !

4. தூற்றல் :—ஒருவனை ஊரில் யாவரும் போற்ற, வீட்டிலிருப்பவர் களோ சண்டாளன், மோசக்காரன் எனக் கண்டபடித் தூற்றுகிறார்கள்.

5. இல்லாமை பிரிக்கிறது :— பெண்ணும் பெற்றோரும் சம்மதித் தும் பணத்திற்காக ஒருவன் தன் விவாகத்தை சிலமாதம் தள்ளிவைக்க, அதற்குள் மற்றொருவன் வந்து அப் பெண்ணை மணந்துகொண்டுவிட, முன்னவன் ஏமாறிப் போய் ஆ! தெய் வமே என்கிறான் !

6. அது சுயநலச் சொல் :—ஒரு வன் கஷ்டமடைந்து இனியேனும் ஜாக்கிரதையாய் வியாபாரம் செய்ய நினைக்கும் சமயம் இன்னொருவன் வந்து—"ஏன் கவலைப்படுகிறாய் ?— நான் இருக்கிறேன், பயப்படாதே— இந்தவிதமான வியாபாரம் செய்— நான் உதவி செய்கிறேன்" என்கி றான். அவன் அவ்விதம் சொல்வது அவனது சொந்தமான காரியத்துக்கே யன்றி இவன் முன்னுக்கு வர அல்ல.

7. அது முன்—இது பின் :— அவன் செய்த உதவிக்காக அவனை முதலில் புகழ்கிறான். அவ்வுதவி யெல்லாம் முழுதும் மோசம் என்றும் சுயநல மென்றும் தெரியும் போதோ அச்சண்டாளன் முகத்தில் விழிக்க வே கூடாதென்று ஒதுங்குகிறான்.

8. முடுக்குப் பேச்சு :—"நகை எவ்வளவு போடுகிறீர்கள் ?—புடவை எவ்வளவில் வாங்குகிறீர்கள் ?—வீடு, நிலம், எழுதிவைக்கிறீர்களா ? அப்

---

தெரிந்த மனிதர்கள் ஒருவாது வீட்டுக்குள் வாடகைக்கு இருக்க வருவ தாயின், அவர்கள் அடிக்கடி உப்பு, மிளகு, புசிப்பு முதலியனகேட்கத் தொடங்கி வாடகைத் தொகைக்குமேல் செலவுவைத்துவிடுவார்கள் ! அவர்கள் சில சமயங் களில் ஒரு துணையாகவு மிருக்கலாம்—பெரிய தொல்லையாகவும் ஏற்படலாம்,

போதுதான் பெண்தர முடியும்'' என்று பெண் வீட்டார் வெகு முடுக்காய்ப் பேச, பெண்கேட்க வந்தவர்களோ இந்த சரக்கு நமது சக்திக்கு மீறியது, விலையதிகம் என்று வேறிடம் செல்கிறார்கள். பிறகு இவ்விதம் முடுக்காய்ப் பேசியவர்கள் சரியான இடம் கிடைக்காமல் சாப்பாட்டிற்கே தாளம் போடும் ஒருவனுக்கு வேறு விதியின்றித் தங்கள் பெண்ணை மனமொப்பிக் கொடுத்து விடுகிறார்கள்.

9. உள்ளூர் சம்பந்தமும், உள்ளங்கைச் சிரங்கும் இரண்டும் ஒன்றே :—இப்பழமொழி வெகு உண்மை. உள்ளங்கைச் சிரங்கு சதா நமைச்சலைத் தருவது போல், உள்ளூர் சம்பந்திகள் ஓயாமல் விருந்தினராய் வந்து, வாழுகிற பெண்ணையும் கெடுத்து, கடன்படவும் வைத்து, கலகமும் வளர்த்துக் குடும்பத்தை முன்னேற வொட்டார்கள். பெண்ணும் பக்கத்திலுள்ள தாய் வீட்டிற்கு அடிக்கடி ஓடிவிடுவாள்.

10. ஒருவர் அநுபவம் :—தன் தாயார் என்றைக்கும் தன்னிடம் அன்பாயிருக்கவும், தான் கலகம் சச்சரவின்றி வாழவும் விரும்பினால் கடைசிவரையில் விவாகம் செய்யாதிருப்பதே மேல் என்கிறார் ஒருவர். தாலி கட்டுகையில் நாகசுரக்காரர்கள் "ஆப்பிட்டுக்கிட்டான்'' என்று சொல்வதுபோல் உறக்க வாசிக்கிறார்களாம்! தாளம் போடுகிறவன் "ஆமா, ஆமா'' என்று தன் தலையை யசைத்துத் தாளம் போடுகிறானும்!

11. இன்னொருவர் சொல் :—என் தாயார் குறிப்பிட்ட பெண்ணையே மணந்தேன். பிறகு என்ன காரணமோ தெரியவில்லை ; சூடேறிய சட்டியில் போட்ட கடுகைப்போல் சீறி விழுகிறார் என் தாயார். நான் வெளியிற் சென்று வீட்டுக்குள் நுழைந்தால் ஐயோபுலிக்கூண்டிற்குள் போவதுபோ லிருக்கிறது. வீட்டில் சமாதானமே யில்லை. என்செய்வேன்!

வ. சு. நாராயணசாமி செட்டியார்.

## II

12. அரை வக்கீல் :—ஆயிரம் பேரைக் கைபார்த்தவன் அரை வைத்தியனுய்விடுவது போல், வக்கீல் தொழில் இல்லாவிடினும், வக்கீலுக்கும் மேம்பட்ட சட்டம் பேசும் வாயாடிகள் பலருளர். இவர்களுக்கு சொந்த வழக்கு யாதொன்றுமில்லை. ஊர் வழக்கில் பொருளைப் பறிப்பர். இவர்கள் பேச்சைக்கேட்டு சொத்தை இழந்தோரும் பலர். கச்சேரிக்குஅடிக்கடி போகிற போக்குவாத்தில் "அரை வக்கீல்'' ஆனதைத்தவிர, இவர்கள் என்றைக்கும் தரித்திரரே.

13. கடுமையான துக்கம் :—யார் இறந்தாலும் உலகத்தார் கடுமையான துக்கம் என்றே கூறுகின்றனர். கிழவனோ, வாலிபனோ—கண்மூடிய பிறகு மறுபடியும் பார்ப்பதற்கில்லை யல்லவா? பாராத துயரம் பெரிதே.

14. மாப்பிள்ளை முறுக்கு :—"வாருங்கள் ஸ்நானம் செய்ய''—என்று நான்கு தடவையும், "இலை போட்டாகிவிட்டது''—என்ற பல முறையும் கூப்பிட்டபின்னரே நாற்காலியைவிட்டு எழுந்திருக்கும் மாப்பிள்ளை—சிலகாலம் சென்றதும் மரியாதை வேண்டாமலே வீட்டுப்பிள்ளை போல் ஆகிவிடுகிறார். மாப்பிள்ளை

---

தொங்குங் கைவீசத் தொடர்ந்தே வாய் பழமை பேச, இடையின் இடையே குடமொன்று துலங்க, நடையழகு காட்டி நடந்திடும் நாரீமணியாள் தான் நானிலவாழ்வு நவமல்லிகைப் பரிமளமாய் நலங்கொண்டு காண்கின்றது.

முறுக்கு கொஞ்சகாலம் வரையில் தான். அதிர்ஷ்டசாலிகள் கடைசி வரையும் காட்டுகிறார்கள். பின்னும் சிலருக்கு மாமியார் வீடே இல்லை!

15. யார் பக்கம் பேச?:—என் தாயார் இருப்பின் அந்தக் குடம் எனக்கே கிடைக்கும் என்கிறாள் சகோதரி. மனைவியோ அது மாமியின் ஞாபகமாய்த் தனக்கு வேண்டும், அதற்குப் பதிலாக வேறு எதையாவது எடுத்துக்கொள்ளட்டு மென்கிறாள். இருவரின் பிடிவாதத்தில் வீட்டுக்காரன் எவர் பக்கம் பேசுவது?

16. சின்ன புத்தி:—தன்னுடைய மருமகளுக்கு அவள் புருஷனுக்குக் கடிதம் எழுதக் கார்டு தந்து, மாப்பிள்ளை வருவதாகக் கடிதம் வந்தவுடனேயே சயன அறையைச் சுத்தம் செய்கிற அதே அம்மாள், தன் வீட்டில் தன் மருகியை வேறு விதமாய் நடத்துகிறாள். வியாதியில் கிடக்கும் தந்தைக்கு அந்த மருகி ஒரு கடிதம் எழுத ஒரு கார்டு தர எவ்வளவோ முணுமுணுக்கிறாள். தன் மகன் தன் மருகியுடன் இன்புற்று வாழவேண்டு மென்ற எண்ணமுமில்லை. இந்த சின்ன புத்தி ஏனோ?

17. செல்லாத பணம்:—இதற்கு இந்தப் பெயரே வொழிய இதுவும் கைக்குக் கை மாறிக்கொண்டுதானிருக்கிறது. நீங்கள் கொடுத்த சில்லரையில் இந்தப் பணம் செல்லாது என்று தங்களிடமுள்ள செல்லாத பணத்தையே காட்டி விட்டு வேறு பணம் பெறுவோரு முண்டு.

18. தள்ளுபடி:—ரயில்களிலும், சர்க்கார் வசூல்களிலும், ஒன்றுக்கு மூன்று வட்டி வாங்கும் புண்ணிய லேவாதேவிக் கடைகளிலும் தள்ளுபடி என்பதே இல்லை. மற்ற இடங்களில்போராடினால்கொஞ்சம்குறையும்.

19. தற்புகழ்ச்சி:—"அவனுக்கு யாரால் அந்தக் காரியம் முடிந்தது?—உத்தியோகம் யார் செய்து வைத்தார்கள்?—இன்று இங்கு வந்துபோன பெரிய மனிதர் யாரின் தாக்ஷிண்யத்திற்காக இங்குவந்தார்?—நான் இல்லாவிடில் அந்த இடத்தில் எவ்வளவு கலகம் நடந்திருக்கும் தெரியுமா?—என் தலையைக் கண்டவுடன் யாவரும் ஓடிவிட்டனர்"—என்றும், இன்னும் பலவாறாகவும் தங்களையே ஆகாசத்தில் உயரத் தூக்கிவைத்துப் பேசிக் காலந் தள்ளுகின்றனர் சிலர்!

20. வழி மறிச்சான்:—மிகவும் அவசர ஜோலியாய்ப் போய்க்கொண்டிருக்கையில், ஒரு சிட்டிகைப் பொடிக்காகக் கூப்பிட்டு, "என்ன சமாசாரம் — எருமை கறக்கிறதா?—என்ன கறக்தும்?—எங்கே ரொம்ப நாளாகக் கண்ணிலேயே காணோம்"—என்றுவீணே பேச்சை வளர்த்து, பிறகு ஒரு சிட்டிகைப் பொடியைப் பெற்று அனுப்பிவிடுகிறார்கள். இதனால் எவ்வளவு வேலை கெட்டுப்போகிறது?

21. குரங்கும் மனிதனும்:—குரங்கினின்றே மனிதன் உற்பத்தியானான் என்பதைக் காட்ட சிலர், குரங்குகள் தங்களின் ஆகாரங்களைக் கன்னத்தில் அடக்கிக் கொள்வதைப் போல, புகையிலை வெற்றிலையைத் தங்களின் கன்னத்தில் அடக்கிக் கொண்டுவிடுகின்றனர்.

22. **சாரதா சட்டம்** :—கிராப்பு செய்து கொள்வது, சராய் அணிவது, கப்பல் ஏறி வெளிநாடு செல்வது, அன்னிய ஜாதி ஸ்திரீகளுடன் கை குலுக்குவது, அன்னியரின் கைப் பட்ட சோடா, லெமினெட், ஐஸ், ரொட்டி, பிஸ்கோத் புசிப்பது, ஆங்கில ஹோட்டல்களில் உண்பது—முதலியவைகளுக்கு சாஸ்திர ஸம்மதம் இருக்கிறதெனத் தூங்கிவிட்டு விவாக சட்டத்தை மட்டும் மகா பிரமாதமாய் எதிர்ப்பதில் பயனென்ன?

23. **மலைப் புளுகு** :—நாம் வீட்டைவிட்டு எங்கும் வெளிச்செல்லாதிருக்கும் நிலையில்—"தங்களை வந்து பார்த்தேன் ; வீட்டில் இல்லை ; எங்கு போயிருந்தீர்கள் ?"—என்று கேட்கிறார் ஒரு புண்ணிய புருஷோத்தமர் !

பண்டிட்—K. விஜயராகவ ஐயங்கார்.

## பிரிந்து சேருபவர்களின் மனோமாறுதல்.

1. மாசற்ற அன்புப் பெருக்குடன் ஓர் காலம் இருந்து, பின்பு அன்புவற்றி அன்னிய தன்மையிலானோர், மீண்டும் தமது பூர்வ அன்பைக்காட்ட முற்பட்டு, அதற்காக இப்பொழுது தெரிவித்துக்கொள்ளும் அன்பான மொழிகள் **உண்மையே யாகுமேனில்,** அவ்வண்ணமே அன்பாய் அவர்கள் இனி நடந்துகொள்வதும் சுலபமாகும்.

2. அங்ஙனம் அவர்களின் வார்த்தைகள் யதார்த்தமாகவே இருப்பதற்கு, அநுபவத்தில் முன்பு நடந்துவிட்ட அன்புநீக்கத்தின் அநீதத்தை அவர்கள் மனதார ஒப்புக்கொண்டு, **அத்தவறுதலுக்குப் பெரிதும் வருந்தியதாகவே** அவர்களின் இப்போதைய வார்த்தைகள் இருக்கவேண்டும்.

3. அவர்கள் இப்பொழுது சொல்லுகிற அன்புமொழிகள் அவர்களின் **உண்மையான மனோ மாறுதலைத் தெளிவாய்க் காண்பிப்பதானால்,** இனிமேல் அதிக அன்பாய் இருப்பதற்கும் அது எவ்வளவோ சகாயமாகக்கூடும். அது முதற்கொண்டு அன்பு தானே வளரவும் தொடங்கிவிடும்.

4. இங்ஙனமின்றி, அன்னோரது அன்பு மொழிகள் தங்களின் சுயகாரியார்த்தத்திற்காக ஏதோ வாயளவில் மட்டுமிருந்து, பழைய அன்புக்கு மறுபடியும் திரும்பியதான **மனோமாறுதல் எதையும் காட்டாவிட்டால்,** அந்த அன்பு வார்த்தைகள் பார்வைக்கு எவ்வளவு வசீகரமா யிருந்தபோதிலுங்கூட, அதற்குமதிப்பு தரமுடியாமல், அம்மாதிரியானவெற்றுமொழிகளுக் கென்றுள்ள குப்பைத்தொட்டியில் அவற்றைப் போட்டுவிட்டு நொந்து ஓதுங்க வேண்டியதாகவே நேரும்.




## 2—அற்ப குணம்

(முன்பக்கம் 458-லிருந்து.)

---

### 161. "நாயின் நீரை மிதிப்பானேன், நல்ல தண்ணீர் விட்டுக் கழுவுவானேன்?"

நாயின் நீரை வேண்டுமென்றே மிதிப்பதில்லை. அறியாமலும் கவனியாமலுமே மிதித்துக் கொள்ளுகிறோம். பிறகு அதை வெகு சங்கடத்துடன் நல்ல தண்ணீர் விட்டுக் கழுவும்படி வருகிறது. அற்பர்களென்றும், பொல்லாத மனிதர்களென்றும் சிலரை நாம் தெரிந்துகொண்டேயிருக்கிறோம். நாயின் நீரைப்பார்த்து அதை மிதித்துவிடாமல் ஒதுங்கி நடந்து செல்வது போலவே, இந்த அற்பர்களிடத்திலும் அதிகம் பட்டுக் கொள்ளாமல் ஒரு அளவில் பேசி அவ்வளவுடன் விலகிச்சென்று மிருக்கிறோம். நம்மைத்தேடி இந்த அற்பர்கள் வந்தாலும் வெளித் திண்ணையிலேயே உட்காருவித்துப் பேசி அப்படியே எழுந்து சென்று விடும்படி செய்து வீட்டுக்குள் அழைக்காமலே இருந்திருக்கிறோம். இரவில் வந்தாலும் வெளித் திண்ணையிலேயே படுக்கவைதது அங்கேயே உறங்கிக்கிடந்து அப்படியே எழுந்து தொலையும்படியும் செய்திருக்கிறோம். அற்ப சகவாசம் நமக்கு கூடவே கூடாதென்றும், அதனுல் நன்மை போலத் தோற்றுவதும் கடைசியில் துன்பத்திற்கே இடமாமென்றும் எவ்வளவோ ஜாக்கிரதையுடன் நடந்துகொண்டு மிருக்கிறோம். இப்படி நாம் எச்சரிக்கையாயிருந்தும், சில சமயங்களில் நாயின் நீரைத் தெரியாமல் மிதித்து விடுவதுபோல், இந்த அற்பர்களிடத்திலும் சற்று ஏமாறி அவர்களை நல்ல மனிதர்களாக எண்ணிவிடுகிறோம். அந்த சமயம் அவர்கள் நம்மிடம் ஒட்டிக்கொண்டு அதிகமாய் நெருங்கிப் பழக முயல, அதற்கும் முன்யோசனை யின்றி இணங்கிப்போய் விடுகிறோம். பிறகு நடப்பதென்ன? அவர்கள் பலமாய் நம்மிடம் உறவு பிடிக்கத்தொடங்கி விடுகிறார்கள். அந்தப் பழக்கம் சில நாட்களே யானபோதிலுங்கூட அதற்குள் ஒரு சண்டையோ கலகமோ காட்டித் தங்களின் அற்ப மூர்க்க சுபாவத்தை வெளிப்படுத்தி விடுகிறார்கள். எதிர்த்துப் பேசி இடிக்கவும் தொடங்குகிறார்கள். ஆரம்பத்திலிருந்த அத்தனை நற்குணங்களும் தீக்குணங்களாக மாறித் தெருச்சண்டைக்கு ஆரம்பிக்கிறார்கள். இவர்களிடம் ஏன் சகவாசம் செய்தோமென்று பிறகு விசாரப்பட வேண்டியதாகி, நல்ல தண்ணீர் விட்டுக் கழுவுவதைப் போல் இவர்களையும் அவர்கள் சகவாசம் வேண்டாமென்று தூரவிலக்கி விடும்படி நேர்ந்து கொள்கிறது. அப்படி அவர்களை விலக்குவதும் வெகு கஷ்டமாய் விடுகிறது. இது தெரியாத்தனத்த

---

லும் பேதமையாலும் சனியனை விலைக்கு வாங்கிய சங்கதி. இந்த அற்ப சகவா சத்தால் எவ்வளவோ சங்கடங்கள் படவேண்டி யிருப்பதுடன், இந்தத் தீமை யை விலக்கிக் கொள்வதற்குமுன் நாம் எவ்வளவோ அவமானங்களையும் அனு பவிக்க வேண்டிவருகிறது. நாம் முதலில் இந்த அற்பர்களை ஒருகால் இப் பொழுது எல்லாம் மாறி நல்ல மனிதர்களாகி விட்டிருக்கக் கூடாதாவென்று நினைத்துவிட்டோம். அப்படி நினைத்தது தவறு என்பதை,

162. "நாயின் வாலைக் குணக்கு எடுக்கலாமா? (குணக்கு—கோணல்)

என்ற பழமொழி நன்கு விளக்குகிறது. எந்தக் காலத்திலாவது நாயி னது வாலின் கோணலை நிமிர்த்துச் சரியாக்கமுடியுமா? அவ்விதமே அற்பர்கள் நல்லோராவது அரிதென்றும், நாயின் வாலுக்குக் கோணல் எவ்விதம் இயற் கையோ அவ்விதமே அற்பர்களுக்கும் அற்பதன்மை ஜென்மத்தோடு பிறந்த குணமென்றும், அவர்கள் என்றைக்கும் அந்த அற்ப சுபாவத்தைவிட்டு உத்தம ராவதில்லை யென்றும் இந்தப் பழமொழி நமக்கு அறிவுறுத்துகிறது.

163. "நாயின் வாலைப்பற்றி ஆற்றில் இறங்கலாமா?"

ஒரு சமயம் அற்பர்களால் ஒரு உதவியையடைய நாம் விரும்புகிறோம். அதற்சாக அவர்களை எதிர்பார்த்து நம்புவதில் நமது பணத்திற்கு நஷ்டமும் வீண் செலவுகளுமே தவிர ஆனகாரியம் ஒன்றுமில்லாமல் ஏமாறவே வரும். வேண்டிய வரையில் பணத்தைப் பற்றிகொண்டு பிறகு கைவிட்டு விடுவார்கள். நாயின் வாலைப் பற்றிக்கொண்டு ஆற்றில்இறங்கினால் அது துணைக்கு உதவுமா? அற்பர்களிடம் ஒரு உதவியை விரும்புவதும் நிஷ்பிரயோஜனமாகவே முடியும்.

164. "நாழி நெல்லுக்கு ஒருபுடவை விற்றாலும்
நாயின் மேனி நிருவாணம்."

ஏன் இப்படி நிருவாணம்? அதனுடைய அற்பபுத்தி அவ்வளவு தான். அற்ப புத்தியில் பெரிய புத்தி எப்படித் தோன்றும்? ஒரு சாமான் எவ்வளவு தான் நயமாகக் கிடைத்தாலுங்கூட அதை வாங்கி நலம்பெற அனுபவித்துச் சுகிக்க அற்பன் ஒருநாளும் அறியமாட்டான். அந்த அற்பனுக்கு அருகேயே நல்லோர்கள் இருப்பினும் அவர்களையடுத்துப் பழகி நல்ல விஷயங்களைக் கேட்டு ஸம்பாஷிக்க அவனுக்குப் புத்தி போகாது. அதற்கு மாறாக அவர்களை விரோதம் செய்துகொண்டு, இவனுக்கென்ன தெரிந்துபோயிற்று, எனக்கு இவன் எம்மாத்திரம் என்று கண்டபடி பழிக்கவும் தொடங்கிக் கொள்வான். அவர்களை அவமதித்துப் பேசவும் முற்பட்டுக் கொள்வான். நாய்க்கு எதிரில் நல்ல புடவையொன்றைப் போட்டால் தனது அசங்கிதக் கால்களால் மிதித்துப் பாழாக்குவது போல், இந்த அற்பர்களின் புத்தியும் நல்லோர்களின் மனத்தைப் புண்படுத்தி விடும்படியான காரியங்களைச் செய்யுமே யன்றி, அந்த நல்லோர்க ளைத் தனக்கு உபயோகித்துச் சுகமடைய ஒரு போதும் தெரியாது. அவ்வள வுக்கு விசாலித்த புத்தியும் கிடையாது. அற்பகுணம் திரும்பத் திரும்ப வந்து தொட்டுக் கொள்ளும். இந்த அற்பம் எப்போது தொலையுமோ வென்று உத்

---

இருவர் முன்பின் போயினும், அவர்களுக்குள் பேச்சு தொடருமாயின், தூரத் தூர வராமல் ஒருவரை யொருவர் எட்டிப்பிடித்தே நெருங்கி நடப்பர்.

தமர்களும் எங்கும்படியாகவே செய்துவிடுவார்கள். அற்பம் நம்மை விட்டு விலகுவது நம்மைப் பிடித்த ஏழரைநாட்டுச் சனியன் தொலேவது போலாம்.

### 165. பனைமரத்தில் நிழலில்லே, பறையனுக்கு முறையில்லே.

பனைமரத்தின் அடியிலிருந்து ஆலவிருக்ஷத்தின் நிழலே எதிர்பார்த்தால் அது கிடைக்குமா? அற்பர்களிடம் பெரிய குணத்தை எதிர்பார்ப்பதில் பயனில்லே யென்பது இதன் கருத்து. பறையனுக்கு முறையில்லே யென்று வந்திருக்கிற சொல், அவர்கள் இருக்கிற கேவலத்தை நோக்கி இன்னும் அவர்களேக் கேவலமாகப் பேசுதற்கு இப்படி உபயோகித் திருப்பதாகத் தோன்றுகிறது. இது முற்றும் அக்கிரமமானது. பறையன் நம்மை யொத்த மானிடனே. அவன் நம்முடன் பிறந்த சகோதரனே. அவனுக்கு அறிவு உண்டு. முறையுண்டு, தெய்வபக்தி யுண்டு, நற்குணங்களுமுண்டு. அவர்களேக் கேவலமாய்ப் பேசிய பழயகாலத்தில் இந்தப் பழமொழி உயர்குலத்து இந்துக்களால் சொல்லப்பட் டிருக்கலாம். இப்படித் தாழ்த்தியது தெய்வ ஸம்மதமாகாது.

### 166. "புலேயனுக்கு வாக்கு சுத்தியும் ஆணேயுமில்லே."

புலேயனின் பிறப்பு அற்ப பிறப்பாக நினைக்கப் படுவதால், அற்பத்திற்கு வாக்கு சுத்தி ஏது? அற்பனுக்கு சத்தியம் தர்மம் தயை முதலிய உயர்ந்த குணங்களேது? ஆணேயேது? அவனுடைய அற்ப தன்மையைக்கண்டு ஒதுங்கவேண்டியதே. இந்தப் பழமொழியில் புலேயனுக்கு வாக்கு சுத்தியில்லே யென்று பழித்தது அவர்கள் கல்வி கற்காத காலத்திலிருக்கலாம். இப்போதோ அவர்களுக்குள் கல்வி எவ்வளவோ அதிகமாய்ப் பரவியிருக்கிறது. புலேயனுக்கு ஆணேயில்லே யென்றது அக்கிரமமான பழிப்பு மொழி. கடவுளுக்கும் ஆணேக்கும் பயப்படுகிற எவ்வளவோ உத்தமர்கள் அந்த வகுப்பில் இருக்கின்றனர். உயர்ந்தஜாதி ஹிந்துக்களில் கூட பொய்ச்சத்தியம் பொய் ஆணேயிடுகிறவர்கள் எவ்வளவு பேர் இருக்கிறார்களென்பதையும், இவ்விதமே "பள்ளி" என்ற வகுப்பாரைப் பற்றிப் பழமொழிப் புஸ்தகங்களில் வந்து உலகில் உலாவும் பழமொழிகளான 145-146—என்னுள்ள பழமொழிகளும் இக்காலத்தில் சரியாகா தென்பதையும், அவைகள் தவறு—அநியாய நிந்தை அறியாமை என்பதையும் இந்த சந்தர்ப்பத்தில் குறிப்பிடவேண்டிய தவசியம்.

### 167. "சுறைப் பூவிற்கும் பறைப்பாட்டிற்கும் மணமில்லே."

இந்த இருவகையிலும் எவ்வித வாசனேயுமில்லாததால், அற்பர்களிடத்தில் உயர்ந்த கல்வி மணத்தையும் குணசீலங்களேயும் காணமுடியா தென்பதற்கு இந்தப் பழமொழியை உபயோகிப்பர். பறைப்பாட்டிற்கு மணமில்லே என்றது உயர்ந்த ஜாதி ஹிந்துக்கள் நமது உத்தம சகோதரர்களான ஆதி திராவிடர்களே ஒரு பழிப்பாக எடுத்துச் சொல்லியதாகும். பறைப்பாட்டிற்கு மணமில்லா விட்டாலும், அவன் வயலிலிருந்து உழைக்கிற உழைப்பால் தான் வீட்டிற்கு உண்ண நெல் வருகிற தென்பதையாவது ஒப்புக் கொள்ளட்டும். மணமில்லே யென்று பழிக்கிற அந்த மணமுள்ள பறைப்பாட்டைப் பாடித் தான் நந்தனார்முக்தியைப் பெற்றார்.

(தொடரும்.)

---

செய்வினை யல்லது தெய்வ மென் செய்யும்?

# ஜெய கல்யாணி



"நாளைக்குத் தை மாதம் பிறக்கப் போகிறது. பொங்கல்கழிந்ததும் நான் பொட்டபாளயத்திற்குச் சென்று விசுவநாத ஐயரின் குமாரனை ஏற்பாடு செய்துவிட்டு வரவேண்டும். என்னடி சொல்லுகிறுய் ?".

"என்ன இப்படிப் பறக்கிறீர்களே! நமது ஜெயகல்யாணிக்கு இப்பொழுது பதினொரு வயதுதானே நடக்கிறது. நல்ல இடமாகப் பார்த்து மெதுவாகச் செய்கிறது. அதற்கென்று அவதி அவதியாய் அரைப் படிப்பு படித்து கணக்கப்பிள்ளை வேலை செய்கிறவனுக்கா கொண்டு போய்த் தொலைக்கவேண்டும் ?"

"அடி முண்டமே! உன் பேர் தான் விசாலாக்ஷி யென்ருல் உன் வாயும் விசாலமாகவே இருக்கிறதே! ஊரெல்லாம் திண்டாடிக்கொண்டு கிடக்கிறது! இன்னும் இரண்டு மாதங்கள் போனல் அந்தப் பாழும் கல்யாணத் தடுப்புச் சட்டம் வந்துவிடுமே! அதற்குப் பயந்துதானே ஊர் முழுதும் இப்பொழுதே கல்யாணங்கள் செய்யத்தொடங்கி விட்டார்கள். கல்யாணிக்குத் தைமாதம் விவாகம் நடக்காவிட்டால் நாணு சாஸ்திரி என்று என் பெயரைச் சொல்லிக்கொண்டு வெளிக்குத் தலைகாட்ட முடியாது."

விசாலாக்ஷி:—நீங்கள்சொல்வதைப்பார்த்தால் வருகிற ஏப்பிரல் மாதத்தில் உலகமே முழுகி, அத்துடன் கல்யாணங்கள் எல்லாமுமே முடிந்து போய் விடும் போல் தோன்றுகிறது. அதற்குப் பிறகு ஒரு கல்யாணமும் நடவாதாக்கும்! அப்படித்தானு ?

நாணு சாஸ்திரி :—நடவாமல் இருக்குமா ? ஜெயிலுக்குப் போகத் துணிந்தவன் கல்யாணம் செய்து கொள்வான். நான் போலீஸ் கொட்டடிக்குப் போகவேணும், சிறையில் களிமொத்தை யுண்ணவேண்டும் என்று நினைக்கிருயா ? இந்த ஜென்மமெடுத்துச்சிரித்துப் பட்ட பாட்டிற்கு இனி ஜெயில் ஒன்றுதான் பாக்கி!

விசாலாக்ஷி :—ஹரி, ஹரி, நான் அப்படி ஒன்றும் எண்ணவில்லை. அந்த வர்க்கத்தைச் சேர்ந்த பெண் நானல்ல. எனக்கு எல்லா சொத்தும் வாழ்வும் நீங்கள் ஒருவர்தான். உங்களால்தான் எனக்கு இந்த வாழ்வும் மஞ்சளும். சிறைக்கு எவரும் போக மாட்டார்கள். போகக்கூடிய இரண்டொருவர் இருந்தாலும், அவர்கள் சிறையில் பட்ட பாட்டை வந்து சொல்லி யழும்பொழுது ஜெயில் என்கிற எண்ணத்தையே விட்டுவிடுவார்கள். தான் இருந்த மலச்சட்டியைத் தன் பக்கத்திலேயே வைத்துக் கொண்டு இரவு முழுதும் அடைபட்டுக்கிடந்து மறுநாள் காலையில் கதவைத் திறந்ததும் தன் மலச்சட்டியை மலத்துடன் தானே தூக்கிக்கொண்டு

---

"மெய்வடிவினன், நங்கண்ணிற் கருமணி, சின்னஞ் சிறுவயதிற் சிநேகன், நம் முழுமனம் பறித்த வடிவம்—அது இத்தனை நாள் நம்முடன் கூடிக் குலாவி குளிர்ந்து இருந்துவிட்டு இன்று தன் ஊருக்குப் பிரயாணமாகிறது. மறுபடியும் வருவ தெப்போதோ ? மீண்டுங் காணும் நாள் என்றேயோ ?"

வெளியில் வர எவன் ஒப்புவான்? கல்யாண சுகம் போதும் போதும் என்றே சொல்வான். மேலும், நம்ம வர்கள் "ஜெயில்" என்ருலே மிக வும் பயந்தவர்கள். எல்லா ஆசாரங்க ளும் அங்கு பாழாவது மட்டுமா? திரும்பி வந்த பிறகு சர்க்கார் உத்தி யோகத்திற்குங் கூட லாயக்கில்லாமல் போகிறது. உத்தியோகத்தைக் கெடுத்துக்கொண்டால் பிறகு பிழைப் பதெப்படி! படித்த படிப்பு அத்தனை யும் ஏதாவது ஒரு உத்தியோகத்தில் நுழைந்துகொள்ளத்தானே? ஆகவே, சிறைக்குச் செல்பவர்கள் அபூர்வம் தான். பெண்ணுக்கு 14-வயதுக் குப் பிறகே விவாகம் செய்ய ஒருவர் பின்னொருவராய் ஆரம்பிப்பார்கள். நாமும் அப்பொழுது நல்ல இடமாகப் பார்த்துச் செய்து விடலாம்.

**நாணு சாஸ்திரி** :—அடி பாவி! சாஸ்திரத்துக்கு விரோதமாகச் செய்ய லாமா? நான் சாஸ்திரி பட்டம் வகித் தும் இப்படி அநியாய அக்கிரமத்தில் இறங்குகிறதா? உன் புத்தி ஏண்டி இப்படிக் கெட்டுப்போயிற்று? சிறைக் குச் சென்ருல் உத்தியோகம் கிடைக் காதென்கிருய். எத்தனையோ மடாதி பதிகள், பெரியோர்கள் எல்லாம் ஒரு கட்சியாய் இதில் நிற்பதால் சிறைக் குப் போய் வந்தவனுக்கு வேண்டிய தன—ஒத்தாசைகள் செய்வார்கள்.

**விசாலாக்ஷி** :—இந்தக் காலம் அவரவர்கள் தங்கள் காரியத்தைப் பார்க்கிற காலம்! தங்கள் பணத்தைப் பத்திரமாய் மூணு முடிபோடுகிறகால ம்! பேச்சுகளுக்கென்ன குறைவா? ஒரு காசை நீட்டவோ, ஒரு உதவி செய் யவோ ஒரு குஞ்சுகுட்டிகூடத் தேடப் போனல் அகப்படாது. மடாதிபதிக ளும் பெரிய மனிதர்களும் செல் வாக்கு இருக்கிற பேர்களுக்கு சகாயம் உதவி செய்வார்களே தவிர, நம் போன்ற ஏழைகளை எட்டிக்கூடப் பாரார்கள். "இது காணச் சமயமல்ல" வென்று வெளியில் அனுப்பிவிடுவார் கள். மகாத்மா காந்தி வருகிருர் என் ருல், எவ்வளவோ ஆரவாரச் செலவு கள் செய்து வரவேற்கிற பெரிய மனி தர்கள் அந்தக் காந்திக்குச் சமானமாய் விளங்கக்கூடிய எளிய தேசாபிமானி கள் தங்கள் வீட்டு வாயிலைத்தேடி வந்தால் அவர்களை லக்ஷியம் கூடச் செய்வதில்லை; முகம் கொடுத்தும் பேசுவதில்லை. பெரிய மனிதரின் பேட்டி கிடைப்பதே அபூர்வமாய் விடுகிறது! எல்லாம் ஆரவாரத்திற்கும் செல்வாக்குக்கும் தகுந்தபடிதான் விம ரிசையும் மதிப்பும் இருக்கும். இதே மாதிரிதான் இப்பொழுது பிரமாத மாய்ப் பேசுகிற மடாதிபதிகளும் பெரிய மனிதர்களும் நம்மைப் போன்ற ஏழைகளை வெளியில் துரத்தி விடுவார்கள். அவர்கள் உதவி செய்வார்களென்று நினைப்பதெல்லாம் வீண். வெறும் மனக்கோட்டைதான்!

**நாணு சாஸ்திரி** :—அப்படியா ஞல் சிறைக்குப்போய் வந்தவனுக்கு எவரும் எந்த உதவியுமே செய்யாமல் வாயளவில் இரக்கப்பட்டு விட்டு, அவ ரவர்கள் தங்கள் காரியத்தில் கண்ணுய் விலகிக் கொள்வார்களென்கிருயா?

**விசாலாக்ஷி** :—நான் அதைச் சொல்லித்தான் தெரியவேணுமோ? பெரிய ஜனத்தலைவர்களை நம்பி சிறைக்குச் சென்று நொந்து திரும் பிய எளிய தேசாபிமானிகளுக்கு

---

தபால்கார்டில் எழுதியதைத் தவறவிடினும், அதைக் கண்டெடுப்பவர் தபாலில் போட்டுவிடலாம். ஆனல், ஸ்டாம்பு ஒட்டிய கார்டாகில், ஸ்டாம்பை எடுத்துக்கொண்டு கார்டைக் கிழித்தெறியவே நேரலாம். காலம் அப்படி!

யார் என்ன உதவி செய்கிறார்கள்? அப்படித்தான் கல்யாண சட்டத்தை எதிர்த்துச் சிறை புகுந்தவன் சங்கதியும்! இந்த உண்மையும் ஊர்பவிசியும் எல்லாருக்குமே தெரிந்திருப்பதால் விவாக சட்டத்தை எதிர்த்துச் சிறைக்குப்போகிற குருவிக் குஞ்சுகள் அதிகமிராது. தண்டனைக்கு நடுநடுங்கி உடன்கட்டை யேறும் வழக்கம் அடியோடு நின்றுபோய்விடவில்லையா? அவ்விதமே சிறைவாசத்திற்குப் பின்னடைந்து விவாக சட்டத்தை எதிர்ப்பதும், எதிர்க்கும் பேச்சுகளும் நாளடைவில் நின்றுபோகும். இப்பொழுது பிரமாதமாய் எதிர்ப்பவர்களே பிறகு ருதுமதியானபின் விவாகம் செய்யத் தொடங்கிவிடுவார்கள்.

**நாணு சாஸ்திரி:**—மத சாஸ்திர விஷயங்களில் இந்தக் கவர்ன்மெண்டாருக்கு என்னவேலை? அவர்கள் ஏன் இதில் பிரவேசிக்க வேண்டுமோ?

**விசாலாக்ஷி:**— கவர்ன்மெண்டு பிரவேசிக்கவில்லை. நம்மவர்கள்தான் கவர்ன்மெண்டைத் தூண்டி எல்லா சட்டமும் செய்வித்தார்கள். உடன்கட்டையைத் தடுத்ததும் நம்மவர்கள்தான். விதவா விவாக சட்டம் செய்யக் காரணமா யிருந்தவர்களும் நம்மவர்கள் தான். வடகலை—தென்கலைச் சண்டையை ஹைகோர்ட்டு வரைக்கும் சென்று பாடம் ஒப்புவிப்பவர்களும் நம்மவர்கள்தான். வீட்டிற்குள் இருக்கிற சங்கதிகளை யெல்லாம் நியாயஸ்தலத்தில் சந்தி சிரிக்கும்படி இழுத்துவிடுகிறவர்களும் நம்மவர்கள்தான். தப்பிதம் நம்மீதே. எத்தனையோ ஆசார அனுஷ்டானங்களை யெல்லாம் நாம் குப்பையில் எறிந்துவிடவில்லையா? வியாசர் கொடுத்த தர்ம சந்தானத்தில் விதுரர், பாண்டு, திரிதராஷ்டிரர் தோன்றியதுபோல், இப்பொழுது எவராவது தர்ம சந்தானம் செய்துகொண்டு புத்திர புத்திரிகளைக் காண விரும்புகிறார்களா? நமது ஜெப—தப—ஓம குண்டங்களெல்லாம் பறந்து, ஸமஸ்கிருதமும் மறந்து, ஆங்கிலக் கல்வியே நித்தியானுசந்தானமாகி, சர்க்கார் உத்தியோகமே நமது புருஷார்த்தமாய் முடிந்திருக்கவில்லையா? சந்தியாவந்தனங்களைச் செய்கிற நேரத்தில் காபி ஹோட்டலில் வீற்றிருக்கவில்லையா? இப்படி நாமே எவ்வளவோ சாஸ்திரங்களைத் தள்ளிக் காலத்தை யொட்டி நடக்கும்பொழுது, இந்த 14-வயதில் விவாகம் செய்வதில்தானா மதத்திற்கும் சாஸ்திரங்களுக்கும் ஆபத்து வந்துவிடப்போகிறது? ருதுமதியான பிறகுங்கூட அதை மறைத்துச்செய்த விவாகங்கள் நம்மவர்களிடையில் எத்தனை எத்தனையோ?

**நாணு சாஸ்திரி:**—உன் அதிகப் பிரஸங்கமும், அதிக வாயும் இருக்கட்டும். உன் தீர்மானந்தான் என்னடி?

**விசாலாக்ஷி:**—அவசரப்பட்டு இப்பொழுது எந்தக் கட்டைத் தடியனுக்கும் கல்யாணியைக் கொடுத்துவிடவேண்டாம். பெண்வீட்டாரில் அநேகர் இப்பொழுது சட்டம் வருவதற்கு முன்பே கல்யாணத்தை நடத்திவிட ஆரம்பித்திருப்பதில் மாப்பிள்ளை மார்க்கட்டின் விலைகள் அதிகமான தொகைக்கு உயர்ந்துபோயிருக்கிறது. நமது ஏழ்மையில் நல்லவரன் இப்பொழுது கிடைப்பது வெகு கஷ்டம். விவாகசட்டம் வந்தபிறகும், மூன்று

---

கப்பலேறிப் போய்வந்தீர்களே, எவ்வளவு சம்பாதித்து வந்தீர்கள் என்றால் ஒன்றுமில்லை யென்றே பேசுவான். ஆனால் அவனுடைய குச்சு வீடு சீக்கிரம் மாடி வீடாகி விடும்! பழைய கடன் தொல்லைகளும் தீர்ந்துபோம்.

வருஷங்கள் கடந்தே நாம் 14-வயதில் தான் செய்யவேண்டும். அதற்குள் எத்தனையோ தனவந்தர்கள் ருதுமதி யான விவாகங்களை நடத்திவிடுவார் கள். அதற்குப் பிறகு நாமும் அவ் வழியில்செய்தால் ஊராரின் கோணல் சொல் ஏற்படாது. அந்தப் பழியை அரசாங்கத்தின் தலையில் கட்டிவிட லாம். கடல் யாத்திரையை முன்பு ஆக்ஷேபிக்கவில்லையா? இப்பொழுது அது சாதாரணமாகி விடவில்லையா? இனி மூன்று வருஷத்தில் ருதுமதி விவாகமும் சாதரண மாகிவிடும்.

நாணு சாஸ்திரி:—அடி பாவி! உன் பஞ்சதந்திரத்திலே மண்விழ! சாஸ்திர விரோதமாய்ச் செய்யச் சொல்கிறாயே! அட நாராயணா!

விசாலாக்ஷி:—நாராயணா, வாசு தேவா, கோவிந்தா என்பதெல்லாம் இருக்கட்டும். என்னை உங்களுக்குக் கொடுத்தபோது 14-வயதாகி, புத்தி யறிந்து பத்து மாதங்களாயிருந்தது.

நாம் அறியப் பெறாத யாவும் பொய்மையேயோ? நாம் அறி யாத நமது மூளை—ஹிருதயம் யாவும் சூன்யந்தாமோ? நாம் காணப் பெறாத லண்டன்—பா ரீஸ் முதலிய நன்னகரங்கள் யாவும் பொய்ப் பொருளேயே? நாம் உணராதொழிந்த நமது மூதாதைகள் அனைவரும் பொய்ப் பட்டுப் போயினரோ? இன்று காணாததெதுவும் பொய்யேயோ? பொய் பொய் எனில் உள்ள மெய் வாழ்வும் பொய்யாகிவிடும்.

அதை உங்கள் தாயார் அறிந்திருந் தும், 500-ரூபாய் பெற்றுக்கொண்டு மறைத்துவிட்டு விவாகத்தை நடத்தி விட்டார்கள். நான் என்ன வாழாமல் போனேனா? இந்த சங்கதியை உத்த மியும் தீனதயாளுவுமான உங்கள் தாயாரின் கட்டளைப்படி உங்களுக்கு நான் இதுவரையில் சொல்லவில்லை. இப்பொழுது அவசியம் வந்ததால் தெரிவித்தேன்.

நாணு சாஸ்திரி:—அடி சண் டாளி, நீச நாயே, துரோகி, அப்ப டியா சங்கதி! சாஸ்திரங்களைக் கெடுத்த குட்டிச்சுவரே, எனக் கென்று எங்கிருந்தடி எமனாக வந்து முளைத்தாய்? இனி என்றைக்கும் உன்னைத் தீண்டவே கூடாது.

விசாலாக்ஷி:—இனிமேல் தீண் டுவது இருக்கட்டும்; நீங்கள் அடிக் கடி போய்த் தொட்டுக்கொண்டும் ஒட்டிக்கொண்டுமிருக்கிற தாசி நீலாம் பாளைவிட நான் கெட்டுப்போய்விட வில்லை. இதுவரையில் என்னைத் தீண்டியதற்கும், தீண்டி ஒரு பையனைப்பெற்று அவனை வேதம் ஓதுவதற்குப் பதிலாகப்பிணத்தை யறுத்துப் பார்த்துப் படிக்கிற ஆங்கில வைத்தியக் கல்வி படிக்க அனுப்பி யிருப்பதற்கும், மறுபடி யும் தீண்டி ஜெய கல்யாணியைப் பெற்று அவளைப் பள்ளிக்கூடம் அனுப்பியிருப்பதற்கும் முதலில் பிராயச்சித்தம் செய்துகொள் ளுங்கள். அந்த 'சித்தம்' முடிந்த பிறகு, உங்களின் தீண்டாமைச் சித்தத்தை யனுஷ்டிக்கலாம்.

இந்த சமயத்தில் ஜெய கல் யாணி பள்ளிக்கூடத்தினின்றும் திரும்பி, தன் பெற்றோர்களிடம் புன்னகையுடன் வந்து நின்றாள்.

(மற்றவை மற்றதில்.)




## அக்பர் சமஸ்தானத்தின் உன்னதம்.

## VI



மனு சொல்லுகிறதாவது:—"நெடுநாள் வழக்கத்தை மாற்றக் கூடாது. அது வேதத்திலும் சாஸ்திரத்திலும் ஒத்துக்கொள்ளப்பட்டது. ஆதலால் மனசாக்ஷிக்கு விரோதமாக நடவாத முதல் மூன்று வருணத்தாரும் பழய வழக்கத்தைக் கைவிடக்கூடாது."

ஃ

உடன்கட்டை யேறுவதும் நெடுநாள் வழக்கந்தான். வேத சாஸ்திரங்களால் ஒத்துக்கொள்ளப்பட்ட இந்த வழக்கத்தை நிறுத்தவேண்டுமானால் பலவந்தத்தாலன்றி வேறொன்றில் முடியாது. விதவைகளுக்குச் சம்மதம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் உடன்கட்டை யேறுவது வழக்கமாயிருந்தது. உடன்கட்டை ஏறாமல் உலகத்தில் வசிப்பதால் அவர்களுக்கு யாதொரு சௌக்கியமுமில்லை. ஆதலால் இறப்பதே நல்லது என்று அவர்கள் உடன்கட்டை ஏறுவார்கள். இவ்வாறு பிராணனை விடுகிற விதவைகள் சுவர்க்கலோகத்தில் தங்கள் புருஷர்களோடு மூன்று கோடியே ஐம்பது லக்ஷ வருஷகாலம் (!) சுகித்திருப்பார்களென்று ஹிந்துக்களுடைய தரும சாஸ்திரம் சொல்லுகின்றது. உடன்கட்டை யேறாதவர்கள் தலையைச் சிறைத்துவிட்டு நகைகளைக் களைந்துபோட்டுப் பிறர் முகம் பார்க்காமல் தங்கள் பிள்ளைகளை வளர்த்து வரவேண்டும். இவ்வாறு நடந்தபோதிலும் இறந்தபின்பு சுவர்க்கலோகம் போகலாம் என்கிற நிச்சயமில்லை. உடன்கட்டை யேறுகிறவர்களோவென்றால் தமது பாவத்தை நீக்கிக் கொள்வதன்றி, தமது கணவருடைய பாபத்தையும் போக்கி மேல் உலகத்தில் நெடுநாள் (?) கூடி வாழ்வார்கள். கணவன் நரகத்துக்குப் போய்விட்டபோதிலும், அவன் மனைவி உடன்கட்டை யேறுவானாகில் அவன் நரகத்தினின்றும் நீங்கி மோக்ஷத்துக்கு (?)ப் போவான். அக்பர் பாதுஷாவானவர்பரிசுத்த இஸ்லாம் சமயத்தைச்சேர்ந்தவர். அந்தச் சமயத்தை உலகில் தோன்றவைத்தவர் மகம்மது நபிகள் என்பவர். அவருடையகொள்கை விதவா விவாகத்தை மனஸ்பூர்வமாய் ஆதரிப்பதாகும். விதவா விவாகம் செய்துகொண்டுஉலகுக்கும்அறிவித்தார். இவற்றை யெல்லாம் உணர்ந்திருந்த

---

ஜமீன்தார்—கவர்னர்கள் ஆதரித்தகம்பெனி என்றால் அவர்களுக்கு நல்ல முதல் தரமான சரக்குகளைக் கொடுத்திருக்கலாம், மற்றவர்களுக்கும் அப்படியே அதிர்ஷ்டம் கிடைக்குமா என்பது தான் யோசிக்கவேண்டிய பெரியசந்தேகம்.

அக்பர் பாதுஷாவிற்கு விதவைகள் புநர் விவாகம் செய்யாதிருப்பது நியாயமாகத் தோன்றவில்லை. ஆதலால் **ஹிந்து விதவைகள் புநர் விவாகம் செய்து கொள்ளலாம்** என்று உத்தரவு செய்து அந்த விஷயத்தில் இருந்த தடைகளை யெல்லாம் நீக்கினுர். மூவாயிரம் வருஷ காலமாக நடந்து வந்த வழக்கத்தை முற்றிலும் மாற்ற அவரால் கூட வில்லை. வேதாகமங்களில் சொல்லி நெடுநாள் நடந்து வந்த வழக்கத்தை விடுவதற்கு ஹிந்துக்களுக்கு விருப்பமில்லை. போதனையாலும் பலவந்தத்தாலும் வழக்கத்தை மாற்ற முடியவில்லை.

ஃ

அக்பர் பாதுஷாவின் ஜீவ காலத்தின் முடிவில் அவருக்குக் குடும்ப சங்கடங்கள் நேரிட்டன. அவர் சக்ரவர்த்தியாயிருந்தும் இந்த சங்கடங்களிலிருந்தும் தப்ப முடியவில்லை. அவருடைய பிரியமான மூத்த குமாரன் குடியினுல் இறந்துபோனுன். அவருடைய இரண்டாவது குமாரன் கலகம் பண்ணினுன். பீஜ் என்பவரும் இருந்தார். அபுல்பேஜில் என்பவரைச் சில பாதகர் கொலை செய்து விட்டார்கள். அதன் விவரம் பின் வருமாறு :—

ஃ

மூத்த குமாரன் இறந்தபோது அவனுக்கு வயது முப்பது. அவன் வேட்டையில் பிரியமுடையவன். குறிவைத்துச் சுடுவதில் மிகவும் திறமுடையவன். அவனிடத்தில் ஒரு துப்பாக்கி இருந்தது. அவன் மிகுதியாகக் குடித்து வெறிகொண்டு சாகக் கிடக்கும்போது மறுபடியும் குடிக்க வேண்டுமென்று கேட்டான். ஒருவரும் அவனுக்குச் சாராயம் கொடுக்கக் கூடாதென்றும், கொடுத்தால் அவர்கள் உயிரிழந்து போகக்கடவார்களென்றும் உத்தரவு பிறந்தது. ஆயினும், ஒருவன் துணிந்து மேற்சொன்ன துப்பாக்கியின் குழாயில் சாராயத்தை நிறைய அடைத்துக் கொண்டுபொய்க் கொடுத்தான். அதைக்குடித்து இராஜகுமாரன் இறந்தான். சாராயங் கொடுத்தவனும் ராஜ தண்டனைக்கு ஆளாகி உயிரை இழந்தான். இராஜகுமாரனுக்கு அவனுடைய பிரியமான துப்பாக்கியே கடைசியில் யமனுக முடிந்தது.

ஃ

அழியாப் புகழையே ஆபரணமாக அணிந்து பிரகாசித்திருந்தவராகிய பீஜ் என்பவர் இறந்தபோது பாதுஷாவானவர் துக்க சமுத்திரத்தில் முழுகினுர். பீஜ் என்பவர் சாகக்கிடக்கிருரென்று நடு ராத்திரியில் பாதுஷா கேள்விப்பட்டார். உடனே இருப்பிடத்துக்குப் போய்ப் பார்க்கும்போது அவர் ஸ்மரணை தப்பி இருந்தார். அவருடைய தலையைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு, “சிநேகிதரே! அலியென்கிற வைத்தியரை அழைத்து வந்திருக்கிறேனே, நீ ரேன் பேசாதிருக்கிறீர்?” என்ருர். யாதொரு பதிலும் பேசாததைக் கண்டு தொப்பியைக் கீழே எறிந்து விட்டுப் புரண்டு அழுதார். சற்று நேரம் பொறுத்து எழுந்து அபுல் பேஜில் என்பவரிடம் சென்று அவருக்கு ஆறுதல் சொல்லித் தமது இருப்பிடம் சென்ருர். பீஜ் என்பவர் காலமானதற்குப் பிறகு அபுல்பேஜில் என்பவரும் கொலையுண்டுபோனுர்.

(மற்றவை மற்றதில்.)

---

தேகம் மெலியவும் பழய வியாதிகள் மறுபடி தோன்றிக்கொண்டு தொந்தரை செய்ய ஆரம்பிக்கின்றன. எந்த வியாதியில் ஆவி பிரியுமோ!






இன்று கூடிய நமது கடையில் ஆகாயப் பந்தல்—அவுட் துப்பாக்கி—ஆநந்த விஸ்கி புட்டி லௌகிகப் பிரசண்ட மாருதம்—அப்டாச்சாரி சுயநலத்தைப்பற்றி ஒரு ஆராய்ச்சியை எழுப்பினர். அதைத் தோண்டத் தோண்ட அது இன்னும் ஆராயவேண்டியதாகவும் ஒரு முடிவான பதில் சொல்லக்கூடாததாகவுமே நெடுகப் போயிற்று. அவர் கூறியதாவது :—

"சுயநலம்" கூடாது என்று பெரியவர்கள் எல்லாரும் சொல்லுகிறார்களே ? இதுவரையில் நிகழ்ந்த உலக சரித்திரத்தில் எவன் தான் சுயநலமில்லாதவன் ? யோகி—ஞானி எல்லோரும் சுயநலமுள்ளவர்களே ; அவர்கள் ஆத்ம ஞானத்தையே பெரிதாகப் பாராட்டுகிறவர்கள். **தனக்கேன வாழாப் பிறர்க்குரியாளன்"** ஒருவன் உண்டா ? நிசமாகுமா ? குடிகளைப் பாதுகாக்கும் மன்னர்கள் தன்னுயிரினைப்போல மன்னுயிரைப் பரிபாலிப்பவன் என்று பெயர் பெற்றும்—தன் நாடு, தன் குடிகள் என்ற சுயநல மேலிட்டவர்களே. அவர்களைப் பரிபாலிப்பதில் தமக்குக் கீர்த்தியும் பரவிய புகழும் கிடைக்கவேண்டுமென்றே அவ்வித மிருந்தவர்கள். பெரிய நூல்கள் எழுதினவர்கள் எல்லோரும் உயிர்கள் க்ஷேமமடைய வேண்டும் என்ற கொள்கையையே முக்கியமாகக்கொண்டு எழுதவில்லை. தம் திறமை வெளியில் தெரிய வேண்டும்—புகழ்கிடைக்கவேண்டும்--என்ற எண்ணங்கொண்டே எழுதினார்கள். சீவகசிந்தாமணி எழுதியது பிறவித்துறவியே யாயினும், 'சில்லரை' விஷயங்களையும் நன்றாக அறிந்துள்ளோம் என்னும் திறமையை வெளிக்குக்காட்டவே அந்நூலை இயற்றியது போன்றும் தோன்றுகிறது. கம்பர் தம்மை ஆதரித்தவரான சடையப்ப வள்ளலைப் புகழும் சுயநல நோக்கையே முதற்காரணமாகக் கொண்டுள்ளது **கம்பராமாயணம்.**

ஃ

இங்ஙனமாக எங்கெங்கே போனாலும் சுயநலமே முக்கியமான கொள்கையாக இருக்க, மனிதர் ஒருவனை— **"இவன் சுயகாரியப்புலி, நம்பாதீர்"** என்று சொல்வதற்கும், பழித்துப் பேசுவதற்கும் என்ன நியாயமிருக்கிறது ? அவ்விதம் சொல்லுகிற மனிதர்மட்டும் சுயநலத்தைத் துறந்தவரா ? அதுவுமில்லை. **தன்னுடைய நலத்தைக் கவனிக்காதவன் மனிதனாவானா ?** மனைவிமக்கள் வீட்டில் இருக்க, அவர்களைக் காப்பாற்றி, அவர்களின் உதவியால் தன்னையும் போஷித்துக்கொள்ளாமல், அவர்களைக் கை விட்டும் தவிக்கவிட்டும் ஒண்டி மனிதனாய்க் கண்டபடி திரி

---

மருந்து பத்தியங்கள் இருக்கையில் இரவில் ஸதிபதிகளின் தனித்தனிப் படுக்கை கொள்வது பத்தியம் கெடாதிருக்கத் துணையாகுமாம்.

கிறவன் மனிதனு அல்லது மானிடப் பதரா? மிருகங்களுமல்லவோ தமக்கு வேண்டிய சௌகரியங்களைத் தேடித் தாம் ஈன்ற குட்டிகளைப் பாது காத்துவருகின்றன? மாதா ஸ்தானத் தில் உலகிலுள்ள ஜீவவர்க்கங்கள் யாவும் தமது மகவினிடத்தில் பரம கருணைக் களஞ்சியமாய் விளங்குகின் றன. அவ்விதமிருக்க, உயர்ந்த அறி வுடைய மனிதன் அங்ஙனம் கருணை வாழ்க்கையுடன் சுயநலம் பேணுதல் தாழ்ந்த செய்கையாமோ?

ஃ

மற்றவரைப் பாதியாத சுய நலம் கிடையாது. ஒருவர் கெட்டுத்தான் இன்னொருவர் சுகமடையவேண்டும். அதிக லாபம் அடைந்தவன் மற்ற வனை நஷ்டப்படுத்தியவனுய் இருப் பான். அதனுல் சுயநலம் வெறுக்கத் தக்கதெனப் பேசிவிடுவது பொருந் துமா? ஒன்று அழிந்தால் தான் மற் ெருன்று உண்டாகும். விறகு எரி ந்து அழியாமல் தண்ணீர் சுடுமா? ஒருவன் எவ்விதத்திலாவது பாதக மடைந்தால்தான் மற்றவன் சுகமாக வாழமுடியும். அண்ணனுக்கோ தம் பிக்கோ கிடைக்கவேண்டிய சொத்து தனம் இவற்றில் ஒரு பகுதியை இழக் கும்படி செய்தால்தான் தங்கையோ தமக்கையோ நகை—பணம் இவற் ருல் லாபமடையலாம். ஒரு கவர்னர் செய்கிற சுற்றுப் பிரயாணம் சுகமாக இருப்பதற்காகவேண்டி எத்தனை ஆயிரம் மனிதர்கள் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது? எவ்வளவு பொருள்,—நெற்றி வியர்வை நிலத் தில் வீழ உழைத்த பொருள்,—செலவு ஆகிறது? ஒருவன் ஒரு பெண்ணை மணந்து வாழ்வதற்பொருட்டு அவ னது பெற்ருேர்களும் மற்ருேர்களும் விவாகத்தை நடத்திவைக்க எத் துணைப்பாடு படவேண்டியிருக்கிறது? ஒருவன் பிணிவாய்ப்பட்டால் அவ னைச் சுற்றியுள்ளவர் எவ்வளவு உபா தைகட்கு உள்ளாகிருர்கள்? ஓர் உயிர் கஷ்டமடைந்தால் தான் மற் ருேர் உயிர் சுகமாய் வாழ முடியும் என்பது இயற்கையா யிருப்பதால், இவ்விதமே சுயநலத்திலும் மற்றவ ரைப் பாதிப்பது என்பதும் இயற்கை யாகவே அமைந்துள்ளது. உண்மை இவ்விதமிருக்க, ஒருவனுடைய சுய நலத்தால் மற்ெருருவன் கஷ்ட மடைந்தானென்று கூறித் தாழ்த்து தல் பொருந்துமா?

ஃ

ஆகவே, ஒவ்வொருவனுக்கும் சுயநலப்பற்று வேண்டுவது அவசிய மாகிறது. அவ்விதமே அந்த சுய நலத்தால் மற்ெருன்று அழிவதோ, கெடுவதோ, பாதிக்கப்படுவதோ— அதுவும் சம்பவிக்கவேண்டியதான அவசியமுடையதாகிறது. மனிதனுக் குப் பசி தனது சுயநலம்; அது இயற் கை. அந்த சுயநலத்தைத் திருப்தி செய்வதற்காக ஒரு தினத்தில் எவ் வளவோ பயிர் பச்சைகளும் பிராணி வர்க்கங்களும் அழிந்து பாழ்பட வேண்டி யிருக்கின்றன. மாமிச பக்ஷ ணம் தகாதென மனிதருக்கு நீதி புகட்டினும் ஊனைத்தின்றே வாழும் புலி, சிங்கம் போன்றவற்றை மாமிச பக்ஷணத்தினின்றும் ஒழிக்க இய லாது. இந்த சுயநலம் பழிப்புடைய தாகுமா? இதில் பிறவற்றைத் துன் புறுத்தாது சுயநலத்தைத் திருப்தி செய்ய இடமுளதா? சிந்தித்திடுக.

ஃ

தேக இயற்கையானது—எத்தனையோ ரகசியமாக மறைவாய் வைக்கப் பட்டுள்ள—தெரியவே தெரியாத அந்தரங்கங்களையும் அந்தந்தக் காலத்தில் தனக்குத் தானே சுயமாக அறிந்து கொள்ள வழி காட்டி ஊட்டி விடுகிறது.

மேலும், சுயநலமில்லாத மனிதன் முன்னேற்றமடைய மாட்டான். பிரபலமும் பெறமாட்டான். நஞ்சுதேசாபிமானிகளிற் பலர் "நஞ்சு"—தேசாபிமானிகளான பின்னரே ஏராளமான தனமும் புகழும் பெற்றவராயினர். எனவே, சுயநலமில்லாத மனிதனுவது தேசமாவது முன்னேற்றமடைதலென்பது முடியவே முடியாது. சுயநலப்பற்றுல் இங்கிலாந்து இன்றளவும் இந்தியாவைத் தன் ஆட்சியின்கீழ் அடக்கி வைத்திருக்கிறது. சுயநலம் என்பது கூடியமட்டில் மற்றவற்றையோ மனிதரையோ அதிகமாகப் பாதிக்காமலிருக்கலாமே யொழிய, முற்றிலுமே ஒரு சிறிதும் பாதிக்கப்படாமலிருக்க முடியாது. உப்பில்லாப் பண்டம் போல் பாதிக்கப் படாத சுயநலமும் ஒரு உபயோகமுமற்றதாகவே முடியும். கேட்காச் செவியால் என் ?—காணுக் கண்ணுல் என்?—ஒரு பயனுமில்லை. ஆகவே, சுயநலம் அவசியமென்றும், அதனைப் பழிப்பது தகாதென்றும் நினைக்கிறேன். உங்களுடைய அபிப்பிராயம் என்ன ?" என்ருர்—அப்படாச்சாரி.

## II

ஆமவடைப் பண்டாரம் அதற்கு உத்தாம் சொல்ல எழுந்தார். "சுயநலம் என்பது இயற்கையே யெனினும், ஒவ்வொன்றுக்கும் "மிதம்" என்ற ஒரு அளவு இருத்தல் போன்று, சுயநலம் என்பதையும்,—ஒரு குறித்த அளவுக்கு மட்டும் பண்டங்களில் உப்பு சேர்ப்பதுபோல்,—தன் வாழ்வுச் சார்பில் ஒரு அளவுக்குட்பட்டுத் தழுவுவது குற்றமுடையதாகாது. இந்த மிதம் என்பது இயற்கைக்குப் பொருந்தியதே. இவ்விதமே, சிற்றின்பம்—கோபம் — ஆத்திரம் முதலிய பலவும் மிதத்தின் எல்லை மீருது ஒரு கட்டுக்கு—ஒரு அளவுக்கு உட்பட்டிருப்பின், அது இயற்கையின் வழியே நலமே தந்திடும்.

ஃ

இந்த மிதம் என்பதை மீறிவிடுகையில் அந்த இயற்கை தீயதன்மையதாய், அமிதமான உணவும் சிற்றின்பமும் கெடுதி விளைப்பதுபோல் இதுவும் விஷமித்ததாகி விடுகின்றது. சுயநலம் மிதத்திற்கு மீறி விடுகையில் தான், ஒருவனுக்குக் கஷ்டமின்றிச் செய்யக்கூடிய உபகாரத்தையும் மறுத்து விடத் துணிந்துகொள்கிறது. அதுகாலை அவன் சுயநலஸ்தன் என்று பிறரால் இகழப்படுகிருன். அவ்வாருகும்போது சுயநலம் என்பது ஒரு தீய செயலாய்ப் பழிப்பிற்குரியதாய் இகழ்ந் தொதுக்கப்படுகிறது. இங்ஙனம் தாழ்த்தப்படுதல்—எல்லைமீறிய சுயநலத்திற்கே யன்றி—மிதத்தோடிருக்கும் கிரமமான சுயநலத்திற்கன்று. காமம் கொடிதே எனினும், காமம் கலவாத காதல் இல்லையாதலால், இல்லற வாயிலாகக் கொண்டு சுவைத்து அதனிற் புளியம் பழமும் ஓடும்போல் ஒட்டாமலொட்டியுள்ள நிலையினரைத் துறவி யென்றே உலகங் கொள்ளுமென்பது பெரியோரின் அமுத மொழி. அவ்விதமே மிதமான தன்மை கொண்ட சுயநலம் பாராட்டற்குரியதே யன்றி, பழிக்குந்தன்மையைச் சாராது" என்ருர்.

---

தெருவில் போகிறவரை அழைப்பதில் அவர்கள் தங்கள் வேலையைக் கெடுத்துக்கொண்டு வந்து பேசிப் பிறகு எழுந்து போகிற அவசரத்தில், ஏதாவது தங்கள் கையிலுள்ளதை மறந்து வைத்துவிட்டுப் போகக்கூடுமானதால்—அப்படி அழைப்பதில் சில சமயங்களில் லாபம் இருக்கிறதாம்.

## III

அப்படாச்சாரியார் அதற்குப் பதில் சொல்லத் தொடங்கினர் :— "மிதத்தின் எல்லை கடந்த சுயநலங்களையும் பழிப்பதற்கில்லை. உலகத்தில் பிரதானமாயுள்ள அன்பு, காதல் என்ற உணர்ச்சிகளுங்கூட, மிதம் மீறிய சுயநலத்தையே உருவாகக் கொண்டிருக்கின்றன. தான் காதலிக்கும் மங்கை தனக்கே உரியவளாக வேண்டுமென்று காதலன் மிதம் மீறி விரும்பி அதன் பொருட்டுத் தன் உயிருக்கும் துணியச் சித்தமாய் விடுகிறுன். மங்கையும் அவ்விதமே மிதம் மீறி அவனையே ஸதா நினைந்து உருகுகின்ருள். இன்னும் ஒரு படி மேலேயுள்ள பக்தியோ மிதம் மீறுவதில் எல்லாவற்றையும் விட அதிகப்பட்டதாகும். அதற்கு ஒரு எல்லை—அளவு என்பதே யில்லை. கடவுள் அவருக்குத் தரிசனந் தந்ததுபோல் எனக்கு ஏன் இன்னமும் தரவில்லை?—என்னை ஆட்கொள்வதில் இத்தனை தாமதமேன்?—ஏன் இத்தனைக்கு என்னை மட்டும் சோதிக்கிருர்?—என்று கடவுளின் தரிசனத்திற்கு அளவுகடந்த ஆவல் கொண்டுவிடுகிருன். சொல்லிலும் கூடச் சுயநலமே; "என் நாதன்"—"என் மனைவி"—என் அரசு—என் தெய்வம் என்பதிலும் மிதம் மீறியே செல்கின்றது. நேசிப்பதிலும் மிதம் மீறிய தன்மையே. ஆட்சியிலும் மிதம் மீறிய சுயநலமே. ஆதிபரம்பொருளாகியகடவுளிடத்திலும் அவ்விதமே; தம் பக்தர்களிடம் மட்டுமே மிதம் மீறிய கருணை யுடையவராகிருர். எங்கெங்கு நோக்கினும் மிதம் மீறிய சுயநலமே தான்.

ஃ

அரசன் ஒரு கொலைக்குத் தண்டிக்கிருன். சண்டையில் அவனே பல உயிர்களையும்,— அநேகமாகக் காரணமில்லாமலே,--கொல்லுகிருன். இதில் மிதமே கிடையாதே? இன்னும் பூமியதிர்ச்சிபோன்ற மற்ற ஸம்பவங்களால், உயிர்க்கொலைகள் பல ஏற்படுகின்றன. இதிலும் மிதம் எது? தன் நாட்டில் அரசன் திருடனைத் தண்டிக்கிருன். செங்கோல் அரசர்களென்று பெயர்பெற்றவர்களுங்கூடப் பகையரசன் நாட்டுச் செல்வமனைத்தையும் எல்லை கடந்து கவர்கின்றனர். இதில் மிதம் எங்கே? இவை விஷமமாகாதா?" என்ருர்.

## IV

பித்தலாட்டம்பிள்ளை இதற்கு விடைசொல்ல எழுந்தார். "மிதம் மீறுவதே எங்குமுள்ளதாய், அதில் விஷமமும் இருக்கிறதானுலும், சக்தியுள்ளவன் செய்தால் குற்றமல்லவென்றும், சக்தியற்ற ஏழைசெய்யின் அது குற்றமென்றும் கொள்ளப்படுகிற ஒரு பிசகான, பாரபட்சமான கொள்கையால் இது நாளதுவரையும் கவனிக்கப்படாமலே இருந்து வருகிறது" என்ருர்.

## V

அதற்கு அப்படாச்சாரியார்—"வலியவனுக்கு ஒரு சூரியனும், எளியவனுக்கு ஒரு சூரியனும் இருந்தால் உலகம் சம்மதிக்குமா? அதைப் பாரபட்சம் என்று பழிப்பதுபோல் மிதம் மீறிய விஷமத்தையும் ஏன் பழிப்பதில்லை?" என்று வினவினர்.

## VI

அல்லாபிச்சை இதற்குப் பதிலாக ஒரு சமாதானம் சொன்னர். "இருவ

---

தன் வீட்டிற்குள்ளேயே இருந்து தன்னுடன் "உர்" என்று முடுக்குடன்இருப்பவரை வலியவந்த காலச்சனியுன் என்றுநினை. அதுவும் அநுபவமே.

ருக்கும் ஒரு சூரியனுக இருப்பதி லிருந்தே இருவரும் ஒரே ஒழுங்கி னுடைய விதியின்படி நடக்க வேண்டுமென்று ஏற்படுகிறது. ஆனல் நடக் கக்காணோம். இடத்திற்குத் தகுந்த நியாயம் பேசி, பாரபட்சமாகச் செய்வதே இவ்வுலகத்து நெடுங்கால நிகழ்ச்சி"—என்ருர்.

## VII

"சரி, அது இருக்கட்டும், மிதம் மீறுவதும் சகஜமே யென்று மேலே சொன்னேன். அப்படி மீறுவதில்கெடு தியில்லே யென்பதையும், அதுவும் இயற்கையே என்பதையும் ஒப்புக்கொள்கிறீர்களா?" என்று அப்படாச்சாரி கேட்டார். புளியோதரைச் செட்டியார் அதற்குச் சொன்னதாவது:— "பக்தி—காதல்—பாசம் —அன்பு— போன்றவைகள் மிதம் மீறுவதில் மற்றவர்க்கு எந்தக் கெடுதியும் செய்யாதவைகளா யிருக்கும்பொழுது அவை உயர்நலஞ் சார்ந்ததாகிக் குற்ற மற்றவைகளாகின்றன. மற்றவைகளோ, கீழ்த்தரமானவற்றை யொட்டியதாகி, மற்றவரையும் பாதிப்பதா யிருத்தலின், அங்கு மிதம் மீறுதல் தீமைக்கும் பழிப்புக்கும் இடமாகின்றது. ஆகவே, இந்தக் கீழ்த்தரமான பகுதியிலுள்ள சுயநலமானது ஒரு எல்லேக்குட்பட்டு மிதம் மீருதிருக்குமளவும் அது குற்றமாகக் கொள்ளப்படுவதில்லே. அளவுக்கு மீறிய சுடுகையுள்ள வென்னீர் கையைச் சுட்டுவிடுவது போன்று, அளவுகடந்தகீழ்தரப் பகுதியின் சுயநலமும் தீயதாய் விடுகின்றது. பாஷாணத்தைச் சுத்திசெய்து நன்மருந்தாக மாற்றுவதுபோல், சுயநலம் என்பவற்றிலுள்ள விஷத் தன்மையை நீக்கி ஏற்பதே உலகம் தூற்ருதிருப்பதற்கும், நலம் பெறுவதற்கும் வழியாகும். இதுவே அதற்கு சிகிச்சை" என்ருர்.




## VIII

இதையும் அப்படாச்சாரி மறுத்து, சுயநலத்திலிருந்து விஷத்தை எடுத்துவிடுவதென்பது காரியத்திற்கு வராத வீண் வெட்டிப்பேச்சே யென்றும், சுயநலத்திலிருந்து விஷத்தை ஒருபோதும் எடுக்கவே முடியாதென்றும், அப்படி எடுப்பின் அது சக்தி கெட்டுப் போய் ஜலத்தில் நனேக்கப்பட்ட துப்பாக்கி மருந்துபோல் காரியத்திற்குப் பயன்படாமலே போய்விடுமென்றும் வாதாடினுர். அதிக நேரமாய் விட்டதால் இவ்விஷயம் ஒருவித முடிவும் பெருமல் இவ்வளவுடன் "நமது கடையும்" கலேயும்படியானது.

'பஷ்தூர்' பொன்வண்டு செட்டியார்.

---

இதற்குப் பதில் வராவிடில் பத்திரிகையில் எழுதிவிடுவேன் என்று பயமுறுத்துகின்ருர் ஒருசிலர். தான் செய்தது மனஸ்பூர்வமாகத் தனக்குச் சரியென்று படும்போது அதைக் குறித்துத் தூஷிப்போருடைய எந்த மறுப்பையும் மதிக்கப் போவதில்லே யென்பதை இவர்கள் அறிவதில்லே.

# காதலர்தம் பொன்னுரைகள்.

"அமிர்த குணபோதினி"யின் ஐந்தாம் ஆண்டுக்கு
இப்போழுதே சந்தாவை யனுப்புமாறு
வேண்டுகின்றுள் ஒரு கண்மணி காதலி
தன் காந்தனைத் தழுவி.



காமனும் ரதியும் கலந்த காட்சியா மெனச் சந்தித்தனர் காதலனுங் காதலியும்.

காதலன்:—அறிவே, அன்பே, எனதுயிர்க் காதலீ, கலைமாதோ நீ கண்மணி! காமர்பூங்கொம்பே! கற்பிற்கரசி! நினது முல்லை முகை தவழ் முறுவல் கண்டேன்! முத்தைக் கண்டேன்! முத்து முத்தாய் மொழிவையோ மோகனுங்கி! நின்னுள்ளன்பே என்னுயிரைப் போஷிக்கும் அமிழ்தாயிற்று கல்யாணி!

காதலி:—புருஷ விம்ஹமே! எனக்கு மெய்வாழ் வளித்த குணமுகிலே! காண்கிலே னென்னை—துஞ சமுகந்தன்னில்! உம் உருவுடன் என்னுருவும் கலந்து மறைந்தது போலும்! நீவிர் உணர்த்தும் சுகானுபவம் என்னே! என்னே! —அது இருந்தவாறு!!

காதலன்:—பிராணசகி! அமிர்த மழை பொழியும் நின்னதரம் கண்டேன், பவளங் கண்டேன், காந்தமென ஒளிரும் நின்கரம் கொண்டு தழுவியதுங்கண்டேன், தேன் மொழியாளே! நீ என்னை அருளொடு நோக்கியதுங் கண்டேன், மின்னலையொத்து நம்மிருவர்பாலும் புளகாங்கிதம் பாய்ந்தோடியதும் கண்டேன். அமிழ்தத்தைப் பருகி அன்புருவமடைந்தேன். எனதாருயிர் கவர்ந்த வஞ்சி! நன்கு தேறினே மதனகலாப மயிலே!

காதலி:—காளைப் பருவச் சந்திர காந்த தீரா! பரஸ்பரம் காதல் காய்த்துக் கற்கண்டும் தேனுமென விளங்குகின்றனம்—நாம் இருவருமே, நமது ஐம்புலன்களும் ஏக காலத்தில் சுகித்தனபோலும்! குலுங்கக் குலுங்கக் குதூகலம் கொண்டோம். ஈருருவமும் ஓர் உருவ மாயினோம். கொச்சைத் தமிழ்கொண்டு கொஞ்சினோம், கொஞ்சியே மிஞ்சினோம். கோலாகல லீலாவதி போலானேன்.

காதலன்:—பெண்மணியே! பூர்வ ஜென்மாந்தர சுகிர்தம் கூட்ட ஒரு பகல் நின்னைக் கண்டு, நின் உருவம் என் நெஞ்சினிலாட, மெய்யெல்லாம் பரவசமடைந்திட, அதுமுதலாக முயன்று நின்னை மணமாலை சூட்டும் மாண்பினை எய்தினேன். உன் அழகைச் சித்திரிக்க பிரமன் செய்த தவமே தவமாம்! ஒப்பிடலரிய நின் மேனியைக் கண்ட தங்கமும் பங்க

இன்ப மடைந்திருக்குங் காலத்தில் அமிர்தமயமான சந்திரிகையுடனே கூடக் கானரஸமும் சேர்ந்தால் எப்படியோ அப்படி "அமிர்த குணபோதினி",

மாயிற்று! நின் திருமுகங் கண்ட சந்திரன்றானும் கரைந்து மறைந் தான் வானிலே.

காதலி:—என்னைப் புகழ்வதிலும், என்னை நீங்கள் பெறுதற்குக் காரண மாயிருந்த மற்றொன்றைப் புகழ்தல் மேல். அதற்கே எல்லாப் புகழும் தகும். அது சின்னஞ் சிறியதே. மல்லிகை மலர் சிறிதெனினும் அதன் மணம் பெரிது பெரிதே.

காதலன்:—அந்த மற்றொன்று தான் என்னவோ நங்காய்?

காதலி:—தம்மை நோக்கிக் காதல் கூர்ந்தது தம் உருவ அழகு கண் டன்று. தம் குண அழகு கண்டே தான். குணம் கருதியே மணந்தேன் உம்மை.

காதலன்:—முகம் கண்டதுங் குணம் காணுதல் கூடுமோ? நீராழங் கண்டாலுங் காணலாம் நெஞ்சாழங் காண முடியுமோ?

காதலி:—காணப் பக்குவமுடை யார் ஏனோ காணார் நாதா? உமது பொன்கரத்திடையே என் தங்கைக்கு வரும் "அமிர்த குணபோதினி" யின் பிரதியொன்று கண்டேன். அந்த **அமிர்தம்** விரும்பிப் பெறுபவர் **அமிர்த குண** சுந்தரராகவே திகழ் வாரென என்னிற் கொண்டேன். என் நெஞ்சமும் நீ கொண்ட கொள்கை சரியே யென்று தழுவி யது. நானும் சிந்தை தந்து சம்மதி யுந் தந்தேன் உமக்கு நங்கையாகி டவே.

காதலன்:—என் அமிர்தமே! தூரத்தூர இருந்த நம்மிருவரையும் ஒன்று சேர்த்தது "அமிர்த குணபோ தினி"தானோ? அதைத் தான் நீயும் புகழ்கவென்று முன் வேண்டினையோ? நன்று நன்று. அது காதலரை ஒன் றாக்கிடும் கற்கண்டு. வாழ்க்கையை மதுரப்படுத்தும் மனோகரம். ஞான மற்றவர்க்கும் ஞானம் ஊட்டும் ஞான மிர்தம். உலகியல் உணராதார்க்கும் உவப்புடன் உரைக்கும் உத்தம தோழி. குறைப்பட்டு மனங்கலங்கு வாரையும் குதூகலப்படுத்தும் விது ஷக விகடக் களஞ்சியம். பழமொழி பகரும் பரிமளம். "நமது கடை" நடத்தும் நவமல்லிகை. அநுபவ கலா வாரிதி. ஆநந்த ஸாகரம். அமிர்த தாரை. படிக்கப் படிக்கப் பரவச மளித்து, முடிக்க மனமெழா முதன் மையைப் பெற்றுள்ளது—"அமிர்த குணபோதினி" யொன்றே யென் பேன்.

காதலி:—நமது இன்பப் பொக் கிஷமாகிய **"அமிர்த குணபோதினி"** யின் **ஐந்தாம் ஆண்டு நெருங்கும் வேளை யிது நாதா.** அது தங்க மென ஒளி தந்து, தங்கம்போல் எந்த விதமாக (ப் பொருள்) அமைவதற்கும் இடம் தந்து, பல பல பக்குவ நடை யுங் கொண்டு பரிமளிக்கின்றது. அது எனக்குக் குறித்த நாளில் வரத் தவ றின் உயிரே துறந்தே உடலேபோல் தான் உலகமீது நான்.

காதலன்:—எந்தக் காலத்துக்கும், எந்தத் தேசத்தினரடைந்த எந்தக் கௌரவங்கட்கும் பெண்பாலார் காரணமாகக் கொள்ளக்கிடந்தாராத லான், நந்தேசத்துப் பெண்மணிக ளும் அந்த மகோன்னத ஏற்றத்தினை யடைதற்கு எளியே போன்றிருந்து உதவும் சிறப்பமைந்தது "அமிர்த குணபோதினி" என்பேன் தோழி.

---

எரிகின்ற கோடைப் பருவத்திற்குக் குளிர்ச்சி பொருந்திய தென்றல் எப்படியோ—அப்படி "அமிர்த குணபோதினி".

அதனை நான் பிரிதலும் ஏது? என்றுமே என் சொந்த சொத்தாகியது. என் சிந்தை யெங்கே?—அது "அமிர்தகுணபோதினி"யிடமேதான். அந்த "அமிர்தம்" காண்பவர் அன்புறுவாதலும் ஒரு அருமையோ? "அமிர்தம்" பெற்றவர் அனைத்தும் பெறுவார். அகில சுகமும் அதன் வழியே தொடர்பாய் அடைவார்.

காதலி:—என்னுருயிர் நாதா! இன்றைக்கே "அமிர்த குணபோதினி"யின் ஐந்தாம் வருட சந்தாவை யனுப்பிவிடுவோமே. தங்கட்கு வரும் பத்திரிகையையே நான் படிப்பதெனில், தாங்கள் படித்து முடிக்குமளவும் காத்திருக்குங் கஷ்டம் அதிகரிக்கின்றது. எத்தனைதான் உறவு எனினும் அவரவர் பசி வேறு வேறு. ஒருவர் புசிக்குமளவும் மற்றொருவர் காத்திருத்தல் அறிவுப் பசிக்குக் கூடாமை. ஆதலின், வழக்கம்போல் தங்கள் பேருக்கு ஒன்றும், புதிதாக என் பேருக்கொன்றும் தருவித்தல் கூடாதோ? ஒரு ரூபாய் ஒரு பெரிதா?

காதலன்:—ஆஹா! செய்வோம். ஒன்றுக்கு இரண்டு கொள்வது, ஒன்று தவறினும், மற்றொன்று உதவுமன்றோ நங்காய்?

காதலி:—"அமிர்த குணபோதினி" என்னுருயிர்ச் செல்விபோல்வாள். எனக்கு இனி வருங்காலந் தன்னில் ஓர் பெண் மகவு உதிப்பதாயின், "அமிர்த குணவல்லி" என்றே பெயரிடுவேன். நம் "அமிர்தம்" ஆரம்பத்தில் 48-பக்கங்களுடன் தோன்றியது. அதற்கு முன் அத்தனை பக்கங்களுடன் எந்தப் பத்திரிகையுமில்லை. பின் 56-பக்கங்களுக்கு வளர்ந்தது. இப்பொழுதோ 64-பக்கங்களுக்கு உயர்ந்துவிட்டது. 31000—சந்தாதார்களுக்கு மேல் அதனை ஆதரிக்கின்றனர். அது வாழி பல்லூழி நீடூழி.

காதலன்:—ஐந்தாம் ஆண்டுக்கு இப்பொழுதே நம் சந்தாவை யனுப்பி வைத்தால் அதன் நிர்வாக சிரமங்கள் சற்றுகுறைதல் கூடும். நம்மைப் போலவே மற்ற அன்பர்களும் இந்தத் தை மாதத்திலேயே அனுப்பிவிட வேண்டுமென்பது என் பிரார்த்தனை. இன்றைக்கே உனக்கும் எனக்குமாக இரண்டு ரூபாய் மணியார்டர் செய்துவிடுகிறேன். நற்காரியத்தை உடனே செய்வது மேலன்றோ?

"அவ்வண்ணமே செய்யுங்கள் நாதா" என்று கூறிக் காதலனைக் கட்டியணைத்து ஆனந்தித்தாள் காதல் வல்லியாகிய கல்யாணி.

---

பக்கங்களைத் திருப்புந்தோறும் பெருகிக் கொண்டேபோய் 64—பக்கங்களாகி, ஒவ்வொரு பக்கத்திலும் ஒவ்வொரு வரியிலும் ஒவ்வொரு எழுத்திலும் அர்த்த புஷ்டியான விஷயங்களைத் தெரிவித்துப் பாவசம் தருகிறாய். ஆ! நின் மேன்மை என்னே! ஐந்தாவது வருடத்திலும் என்னிடம் வா.

செல்வச் சிறுமியே! "அமிர்த குணபோதினி" எனும் நங்காய்! வந்தனையா, வா: 64—பக்கங்களுக்கு இப்பொழுது உயர்ந்து விட்டனையா? ஆநந்தம் ஆநந்தம், பரமாநந்தம். ஐந்தாவதுவருட சந்தா இன்றே அனுப்புகிறேன்.

மெய்ஞ்ஞானக் களஞ்சியம் என்றும், பேரின்ப ஊற்றென்றும், அநுபவ வாரிதி யென்றும் யாவரானும் புகழப்படுவது "அமிர்த குணபோதினி."




## பெரியோர்களின் பெயரால் வியாபாரங்கள்!

ஏமாற்றுப் பிழைப்பிலும் பெரியார்கள் பேரைச் சொல்லி ஏமாற்றுவது ஒருபடி உயர்ந்ததென்று, அந்த வித்தையில் கைதேர்ந்தவர்களின் கொள்கை. அதனுலேயே மாரியம்மனுக்கும் பழனியாண்டவனுக்கும் செந்தூராண்டவருக்கும் யாசகம் எடுத்துப் பிழைப்பது இகழப் படுவதில்லை. ஆனுலும், அவ்விதம் செய்வோர் பெறும் பணத்தில் எவ்வளவு மேற்குறித்த தெய்வங்களுக்குப் போகுமோ—அது அவர்களுக்கும் அந்தத் தேவதைகளுக்குந் தான் தெரியும். பாமரர்கள் தான் தம்போலொத்த பாமரரை இவ்விதம் ஏமாற்றுகிறுர்களென்றுல் அது ஒரு விதம் ஸகிக்கக் கூடியது: ஆனுல் படித்தவர்களாய் நாகரீக வழியில் வாழ்பவர்களாயுள்ளவர்கள் செய்யும் வியாபாரத்திலும் விளம்பரவகையிலும்பெரியோர்களின் பெயரை உபயோகிக்கிறுர்கள். விளம்பரம் செய்யப்படும் சரக்குகள் ஒரு விதத்திலும் உபயோகமானதல்ல என்று, விளம்பர மயக்கால் ஏமாந்து வாங்கி உபயோகித்தவர்கள் பல சமயங்களிலும் குறை கூறவேண்டியிருக்கிறது. போலிச் சரக்குகளைப் பெரியாரின் பெயரைச் சொல்லி விளம்பரஞ்செய்தால் வெகு எளிதில் நல்ல அறுவடை கிடைக்கும் போலும்!

நான் இரண்டு வருடங்களுக்கு முன்பு ஒரு வைத்தியரிடமிருந்து தீராத பிணிகளுக்குச் "சரியான மருந்து" பெற்றேன். அதற்கு ஆறு ரூபாயும் வி. பி. தக்ஷிணையும் செலுத்தினேன். வைத்தியர் குறித்த காலத்திற்குள் அந்தப் பிணிகளில் ஒன்றேனும் அனுபவத்தில் குணமானதாக இல்லை. அவருடைய இஷ்ட தேவதைகளின் எண்ணிக்கையையும், அவர் உபயோகிக்கும் பெரியோர்கள் ரிஷிகள் இவர்களின் பெயர்களையும் பார்க்கில் எவர் மனத்தையும் வசீகரிக்கத்தக்கதா யிருக்கிறது. வயிற்றுப் பிழைப்புக்காக இந்த வைத்தியர்கள் பெரியோர்களின் பெயருக்கும் சாஸ்திரங்களுக்கும் ஏன் தான் இழுக்கு சம்பாதித்துக் கொடுக்கிறுர்களோ?

"நீண்ட கோம்பு."

[வைத்தியத்தில் இவ்விதம் பெரியோர்களின் பெயரை உபயோகித்துச் செய்யும் மோசங்கள் அநந்தம். ஆயுர்வேதத்தின் பெயரைப் புகன்று சிறு சிறு அளவுள்ள புட்டிகளில் மருந்தை அடக்கி விலையை உயர்த்தி விற்பவர்களும் பலர். அவற்றுல் பிணிதீர்வதேயில்லை. 5-6-புட்டிகள் வாங்கினுல் ஏதேனும் குணம் தெரியக்கூடும் போலும்! இந்த மோச வியாபாரங்களில் காட்டப்படும் நற்சாக்ஷிப் பத்திரங்களோ எவரும் பிரமிக்கத் தக்கவை. முக்கால் பாகம் வயிற்றுப் பிழைப்பு வித்தை! உண்மையானவர்களுக்கு வியாபாரமில்லை. படாடோபமாய் விளம்பரம் செய்பவர்களையே ஜனங்கள் தேடிச் செல்லுகின்றனர். கடற்கரைக்கு வரப் பிரியப்படாதவர்களும், நாடகத்தில், சினிமாவில் கடற்காட்சி காண ஆவலாய்ப் புகுவர். பொய்மைக்கே ஒரு புதிதான வசீகர மகிமை உண்டுபோலும்! ப-ர்.]

---

கற்பாகிய கவசம் தாங்கியுள்ளவர்களைப் பேய் பிசாசுகள் அண்டாவாம்.

# சென்றமாதம்

"உங்களப்பன் பூச்சிக்குப் பயப்பட்டேனா, உன் பூச்சிக்குப் பயப்பட" என்பது போல, ஸ்ரீரங்கத்தில் வடகலை--தென்கலையாகிய U—Y—நாமதாரிகளின் நாமச்சண்டை முற்றிப்போய் கோர்ட்டுக்குப் போயிருக்கிறது.

**ஸ்ரீரங்கத்தில் 'யூ'—'ஒய்' நாமச் சண்டை!**

இது பிராமணர்களுக்குள் நடக்கும் போர். நமக்கு வேண்டியது ஸ்ரீரங்கநாதர்மட்டுமே தவிர இந்த "கலை"ச் சண்டைகளல்ல. இது எப்படி முடிந்தபோதிலும் நமக்கு இலவசத்தில் கோயில் பொங்கல் கிடைக்கப் போவதில்லை! தென்கலை—வடகலையோடு, கிழக்குகலை, மேற்குகலை யென்று இன்னும் அதிகமாக இரண்டு 'கலைகள்' சேராமற்போனது அந்தந்தக் கோயில்கள் செய்த பாக்கியந்தான் போலும்!

ஃ

"புத்தி முற்றினவருக்குச் சித்தியாத தொன்றுமில்லை" என்பதற்கிணங்க, சென்றடிசம்பர் மாதம் லாகூரில் கூடிய 44-வது காங்கிரஸ் மகா சபை மிக்க கம்பீரமாய் ஆரம்பமாயிற்று

**44-வது லாகூர் காங்கிரஸ்.**

மகாத்மா தமது சுயேச்சைத் தீர்மானத்தையும், சட்டசபை பஹிஸ்கார தீர்மானத்தையும் நிறைவேற்றிவிட்டார். இன்று நாம் சுயேச்சை யடைந்து விட்டதாகச் சொல்லவில்லை யென்றும், அப்படிச் சொல்வது போட்டிக் கவர்ன்மெண்டு ஏற்படுத்திவிட்டதற் கொப்பாகுமென்றும், சுயேச்சைக் கொள்கையை சீக்கிரம் அடைய முயற்சிக்கப்போவதாகவே கூறுகிறேம்—என்றும் மகாத்மா "சுயேச்சை" என்பதற்குள்ள சூட்சும கருத்தை விளக்கிச் சொன்னார். இனி, சட்டசபை பஹிஷ்காரமானது பலருக்கும் கலக்கத்தைத் தரும். எங்கேயோ ஒதுங்கி மூலையில் கிடந்தவர்களின் பெயர்களை வெளியில் பலருக்கும் தெரியவைத்து எழுத்துகளின் பட்டத்துடன் பிரபலப்படுத்தியது சட்டசபையின் பிரவேசமே. புதிய மதிப்பு உண்டானதும் அதனாலேயே. ஆகவே, தேச நன்மை விளையாவிடினும், சட்டசபையில் போய்க் கம்பீரமாய்க் குந்துகிற கௌரவத்தில் ஆசை வைத்தவர்கள் சட்டசபையைப் பஹிஷ்கரிப்பதென்பது கஷ்டம்தான். உண்மையான தலைவர்கள் மட்டுமே காங்கிரஸின் ஆணைக்கு உட்பட்டு பஹிஷ்காரம் செய்வர். காங்கிரஸ் இம்முறை ஒரு தலைச் சார்பாயும், சில முக்கியஸ்தர் கட்கு மிக்க அதிர்ப்திகரமாயும், வேறு சிலரது மனதுக்குப் பிடிக்காத தீர்மானங்களைச் செய்தும், பிளவுகளுக்கு இடம் வைத்தும், அவசரப்பட்டும் நடந்ததென்றே சொல்லவேண்டும்.

ஃ

---

காலதேவதை எந்த உறவையும் பகையாக்கும், எந்தப் பகையையும் உறவாக்கிவிடும். அந்த முக்கியமான ஒரு பேர்வழி கண்மூடியபிறகு எல்லா பகையும் ஓடிப்போய் முன்பு பிரிந்த யாவரும் பழய உறவுடன் ஒன்றாகி விடுவார்கள்.

"காசிக்குப் போனேன், காவடி கொண்டு வந்தேன்" என்பதாக, 44 வது காங்கிரஸுக்கு அக்கிராஸனராய் வந்தேன், என் கருத்துகளை விளக்கிக் கொடுக்கிறேன் என்று பண்டித ஜவஹர்லால் நேரு செய்த காங்கிரஸ் தலைமை உபன்யாசத்திலிருந்தும் சில குறிப்புகளை இங்கு தருகிறோம்.

**காங்கிரஸ் தலைமைப் பிரசங்க சாரம்.**

(1) உலக சமாதானத்தைப் பற்றிய பேச்சு நடந்துவருகிறது. * * * சமாதான தெய்வத்திற்கு வாசா கைங்கரிய மலராலேயே அர்ச்சனை செய்யப்படுகிறது. (2) இன்று நாம் இந்தியாவுக்குப் பூரண சுயேச்சையைக் கோருகிறோம். * * * * இனி அன்னிய நாட்டினருக்கு அடங்கியிருக்கத் தயாராக இருக்கவில்லை யென்பதை அவர்களுக்கு அறிவிப்போம். இன்றோ நாளையோ நமது உத்தேசத்தைப் பூர்த்தி செய்து கொள்வதற்கு வேண்டிய சக்தி நமக்கு இல்லாமலிருக்கலாம். நமது பலஹீனம் நமக்குத் தெரிந்து தானிருக்கிறது. * * * ஆனால் நமது மனவுறுதியின் தன்மையைப் பற்றி எவராவது, முக்கியமாக இங்கிலாந்தாவது தப்பர்த்தம் செய்துகொள்ள வேண்டாம். * * * இன்றும் நாளையும் நமக்கு வெற்றி கிடைக்காவிடினும், நாளை மறுதினம் நமக்கு வெற்றி கிடைத்து விடலாம். (3) பலாத்காரமான முறையைவிட, சாந்தமான முறை விரும்பத் தக்கதாகவும், நிலைத்து நிற்கக்கூடியதாகவு மிருக்கிறது. பலாத்காரமான செய்கை பிறகு அதனுடைய எதிரொலியையும் சோர்வையும் எற்படுத்துகிறது. * * * பலாத்காரம் கெடுதலானதே; ஆனால் அடிமைத்தனம் அதிலும் மோசமானது. (4) கூட்டங்கள் ஒன்றும் செய்துவிட முடியாது. சுயேச்சைக்கு அடக்கமும் கட்டுப்பாடும் வேண்டும். நம்மில் ஒவ்வொருவரும் பொது நன்மையை உத்தேசித்து சொந்த நன்மையை விட்டுக் கொடுக்கவேண்டும். (5) நாம் என்ன சாதிக்கப் போகிறோமென்பதை ஒருவரும் சொல்லுவதற்கில்லை. நமக்கு வெற்றி எற்படாமலிருக்கலாம். ஆனால் தைரியமாகத் துணிந்து இறங்குகிறவர்களுக்கே வெற்றி கிடைக்கிறது. என்ன நேர்ந்து விடுமோவென்று பயப்படுகிறவர்களுக்கு ஒருக்காலும் வெற்றி கிடைப்பதில்லை. (6) கிடைக்கும் சன்மானம் கஷ்டமும், சிறைவாழ்வும்தான். மரணமும் கிடைக்கலாம், ஆனால், புராதனமானதும், வாலிபப் பருவத்தினதுமான தேசத்தின் விடுதலைக்கு உங்களால் இயன்ற சிறிது கைங்கர்யத்தைச் செய்த ஆறுதல் உங்களுக்கிருக்கும்.

ஃ

**பரிபூரண சுயேச்சைத் தீர்மானம் சரியா?**

"வயிற்றைக் கட்டினவளுக்கு ஆழுடையான், வாயைக் கட்டினவளுக்குப் பிள்ளை" என்பதுபோல, ஒரு அளவுக்குட்பட்டு விடுதலைப் பேச்சைக் கட்டி வைக்கும் வரையில் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டின் அநுதாபமும், ஆதரவும் இருக்கும். இந்த எல்லையை மிக மீறியதாய் 1929-ம் வருஷத்திய காங்கிரஸின் "பரிபூரண சுயேச்சை"த் தீர்மானம் இருக்கிறது. இத்தீர்மானம் மிக்க அபாயகாமானது. காங்கிரஸ் சபைக்கே

---

கைவேலைக்காரர்கள் பேசிக் கொண்டே வேலை செய்யலாம், பேச வருவோரால் அவர்களின் வேலை கெடாது. ஆனால் மனோவுழைப்புக்காரர்களுக்கோ எவராவது அருகில் வரின் அந்த மனோமுயற்சி மண்ணாகி விடுகிறது.

கெட்ட பெயரை உண்டுபண்ணக் கூடியதாய், ஒரு சமயம் அராஜகத்திலும் முடிந்துவிடும். "பரிபூரண சுயேச்சை" என்பதற்கு பிரிட்டிஷ் கவர்ன்மெண்டிற்கு உட்படாத சுயேச்சை யென்றே பொருள்படுகிறது. இந்த மீறிய சுயேச்சையைக் கவர்ன்மேண்டு வெறுமனே பார்த்துக்கொண்டு நிற்குமா? தனது ராணுவ பலத்தைக் கொண்டு ஒரு நொடியில் அடக்கித் தகர்த்துவிடும். இந்த நிலையில் மகாத்மாவும் அவரைச் சேர்ந்தவர்களும் பரிபூரண சுயேச்சைத் தீர்மானத்தை காங்கிரஸில் நிறைவேற்றியிருப்பது துக்கத்தை விளைவிக்கத்தக்கதா யுள்ளது. பரிபூரண சுயேச்சையை யடைந்துவிட்டதாகக் கருத்தல்லவென்றும், பரிபூரண சுயேச்சையை யடைய இது முதற்கொண்டு முயற்சிக்கப்போவதாகவே அதன் கருத்து என்றும் மகாத்மா கூறுகிறார். இதிலும் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டின் சம்பந்தத்திலிருந்தும் விலக முயல்வதாகவே பொருள்படுவதால்—அதுவும் அராஜகச் செய்கைக்கும், கவர்ன்மெண்டின் எதிர்ப்புக்கும் எதுகாத்தைச் செய்துவிடலாம். பரிபூரண சுயேச்சை என்பது சுத்த பைத்தியமான எண்ணந்தான். இதற்கும் இந்தியாவின் தற்கால நிலைக்கும் வெகுதூரம்! இதை விட, குடியேற்ற நாட்டு அந்தஸ்து முறையை அடைவதும், அதைக்கேட்டுவெற்புறுத்துவதும்,—பரிபூரண சுயேச்சையை யடைவதைக்காட்டிலும்,—அதிசுலபமாகப் பெறக்கூடியது. அது தப்பு என்று எவரும் சொல்லார். பிறருடைய எதிர்ப்பை எவ்வளவு குறைவாக அது கிளப்பிவிடக் கூடுமோ, அவ்வளவு குறைவாக அது கிளப்பிவிடும். அது பிரிட்டிஷ் கவர்ன்மெண்டுக்கு உட்பட்ட ஆட்சியாதலின், பிரிட்டிஷார் அராஜகமென்று அதை எதிர்க்காமல் அநுதாபத்துடன் அதற்கு செவி சாய்ப்பர். ஆகவே, காரியத்திற்கு உதவாததும் நிறைவேருததுமான எண்ணங்களுடன் கனத்த துன்பத்தையும் கவர்ன்மெண்டின் எதிர்ப்பையும் பெறுவதைவிட, அந்தத் துன்பங்களன்னியில், சித்தி பெறக்கூடியதான லக்ஷியங்களைக்கொண்டு அவற்றை நியாயமான பிரயாசைகளின் மீது நிறைவேற்றிக் கொள்ளப் பார்ப்பதே நாம் இருக்கும் நிலைக்கும் பக்குவத்திற்கும் ஏற்றது. இதற்குக் குடியேற்ற நாட்டு முறையே சரி. இதைவிட்டுப் பரிபூரண சுயேச்சைத் தீர்மானத்தை நிறைவேற்றியது அவசரப்பட்டுச் செய்ததேயாகும். இது அதிக ஓட்டுகளால் காங்கிரஸில் நிறைவேறி யிருப்பினும், அந்த ஓட்டுப் பலத்தைக்கொண்டு ஒன்றும் செய்துவிட முடியாது. 1929-ம் ஞூக் காங்கிரஸ் இவ்வாறு எல்லை கடந்த தன்மையில் சென்று மிகவும் அதிர்ப்திகரமாய் முடிந்தது.

---

நீண்டு போய்ப் பல பத்திரிகைகளிலும் தொடரும் வியாசத்தைப் பெரும் பான்மையோர் படிக்காமல் அலுத்து வேறுபக்கம் பார்க்கப் போய்விடுகிறார்கள்.

---

நம்மிடம் இச்சகம் பேசும் நண்பர்கள் சுயநலமுள்ளவர்கள். நம்மிடம் தவறுகண்டு அன்புடன் திருத்தி உதவுகிறவர்களோ களங்கமற்றவர்கள்.

---

ஒரு பத்திரிகையில் விளம்பரம் பிரசுரிப்பவர் அந்தப் பத்திரிகை வந்ததும் முதலில் அவசரம் தமது விளம்பரம் இருக்கிறதாவென்று பார்த்துவிட்டே பிறகுதான் மற்ற பக்கங்களைச் சமாதான மனதுடன் திருப்புகிறாராம்.

விவேகம்
விநோதம்
விசித்திரம்
விகடம்




அநுபவம்
அற்புதம்
ஆச்சரியம்
ஆநந்தம்

# புதியதிலே புகுகிற புத்தி !



விகடன் எனது நேயர்களுக்குப் புது வருஷ சோபனம் சொல்லுகிறேன். புதியதுக்குத் தகுந்தாற்போல் புதியதில் கைவைத்துக் கொஞ்சம் பிட்டுக் காட்டுகிறேன். புதியது என்ன, அதிலே புகுகிற புத்தி என்னவென்பீர்களோ, அதுதான் புதியதினுடைய மகத்துவக் கதை! இந்த வருஷத்திற்கு 1930—என்று பேரு? அல்ல அல்ல; புதிய வருஷம் என்று பேரு! நேற்று கட்டி முடித்த வீட்டுக்கு மாதவ செட்டி வீடு என்று பேரு? அல்ல, புது வீடு என்று பேரு! இவ்விதமே இன்று குடிவந்தவர்களுக்கு புதிய குடிவந்தவர்கள் என்று பேரு! அந்தக் கல்யாணக்காரனுக்கு புது மாப்பிள்ளை என்று பேரு! கடைவீதிகளையும் உயர்ந்த கட்டிடங்களையும் அதிசயித்து அண்ணாந்து பார்த்துக்கொண்டு போகிறவனுக்கு ஊருக்குப் புதிய மனுஷன் என்று பேரு! இப்படிப் 'புது' என்கிற இரண்டெழுத்தை முதலிற் சேர்த்துவிட்டதும், அதற்கொரு தனி மகத்துவம் ஏற்பட்டு விடுகிறது. அந்த மகத்துவம் காரியத்திற்கு வந்து பழக்கிறதா என்பதே விகடனுடைய கேள்வி. அந்தச் சரக்குதான் வெகு முடுக்கிலிருக்கிறது! வேகுவதும் வெகு கஷ்டமாகிறது! பழுத்துப் பயன்தருவது கூட எங்கேயோ வெகு கொஞ்சம்தான்!

ஃ

வாடகை வீட்டை விட்டுப் புது வீடொன்று தனக்குக் கட்டிக்கொள்ள யாருக்குத்தான் ஆசையில்லை? காசு அதற்குக் கூடிவரக் காணோமே கர்த்தாவே! அவன் கட்டிவிட்டான்! இவன் கட்டிவிட்டான்! அவனுக்கும் இவனுக்கும் சேர்ந்ததே ஆயிரம்—பதினாயிரமாய்? எனக்கு ஒத்தைக் காசு வரக் கண்விழி பிதுங்குதே தேவா! அந்தக் காத்தவராயன் என்னைப்போலக் கஞ்சி குடித்தவன்

---

ஒன்றை விரும்பி அதற்காக வந்தாலும் சாதாரணமாக வந்தது போல் நடிக்கிறான். அவன் வந்த கருத்தைத் தெரிந்தவனோ அதைப்பற்றி ஒன்றுமே அறியாதது போலிருந்து வேறு பேச்சுக்கள் பேசி அனுப்பிவிடுகிறான். இதில் ஒருவன் வாய் திறக்க நாணி ஏமாற, மற்றவனோ தந்திரசாலியாகிறான்.

தானே! அவனுக்கு எப்படி வந்ததோ இத்தனை வாழ்வும் என்று பொறுமைப்படப் புத்தி போகிறதே தவிர, அவன் உழைத்த உழைப்பையும், அவன் செய்த புது யோசனைகளையும் எண்ணிப் பார்க்கிறதில்லை. உழைப்பதுமில்லை. அவன் புத்தியும் இவனுக்கு வருவதில்லை! வீடு கட்டப் பணமும் சேருவதில்லை! பெருமூச்சிலேயே காலமும் போய்விடுகிறது!

ஃ

கட்டிக்கொண்ட கண்ணாட்டி கால்மாட்டிலிருந்தாலும் அவள்மேல் கவனிப்பில்லை! இன்னொருத்தி தனக்கு ஏற்படக்கூடாதா என்பதிலேயே நினைவு! புதுப் பெண்டாட்டி என்றால் அதிலே கனத்த பிரியம்! புதிதாய் வருகிறவள் அபராஞ்சித் தங்கமாய் இருப்பாள், ரத்தின—மாணிக்க—வைடூரியமாய் இருப்பாள், என் மனத்திற்கு இசைந்த மாகதவல்லியாக இருப்பாள், அவளை அப்படி நடத்துவேன், இப்படிக் கொஞ்சுவேன் என்று புது புது மனக்கோட்டைகள் கட்டுகிறதே தவிர, முடிக்க விதியில்லை. அய்யன் போட்ட புள்ளி தீருமா? இருக்கிறவளுக்கே தீபாவளி சேலைக்கு இளிக்கும்போது, இனி வருகிறவளுக்கு எங்கிருந்து கொடுப்பாய் என்று மற்றவர் ஏச, இதற்குள் வீட்டுக்காரி வீடு நிறையக் குட்டிகுழந்தைகளைப் பெற்று இன்னும் பலமாய் ஊன்றிக்கொள்ளுகிறாள்! மனைவி கெட்டவளானாலும், அவள் மக்களுக்கு அவளைப்போல இன்னொருத்தி நல்ல தாயாக அமரமுடியாதென்று தனக்குள் ஒரு சமாதானத்தை எழுப்பிக்கொண்டு புது ஆசைக்குக் கதியின்றி நின்றுவிடுகிறான்.

ஃ

என்றைக்கு இந்த உத்தியோகத் தொல்லை தொலையுமோ? எந்த நாளைக்கு அப்பாடா என்று வீட்டில் உட்காருவோமோ? புது புது ஊர்கள் கண்டும், நதிகளாடியும், நானா க்ஷேத்திர தரிசனைகள் செய்தும் ஆநந்திப்பது எப்போதோ? என்று ஆயிரம்நினைவுகள் எண்ணுகிறது! தன்னிடம் வருகிறவர்களிடமெல்லாம் உங்கள் ஊருக்குத்தான் வரப்பிரியம், அங்கேயே தங்கியிருக்க எண்ணம் என்று ஆவலாதிகளுடன் சொல்லிக்கொள்கிறது! கடைசியில் உத்தியோகம் முடிவுக்கு வந்து, வீட்டில் சாய்ந்துகொள்ள ஓய்வு கிடைக்கும்போது இன்னொரு கவலை தொட்டுக்கொள்கிறது! இது வரைமாதாமாதம்வந்துகொண்டிருந்த சம்பளம் நின்றுபோச்சுதே என்றவிசாரம் ஊன்றிக்கொள்ள, வேறு எந்த இடத்திலாவது, எவ்வளவு சொற்ப சம்பளத்திற்காவது இன்னொரு வேலையைப் பிடித்துக்கொண்டு உழைக்கப் போய்விடுகிறது! இவர்கள் புது ஊர்கள், புது க்ஷேத்திரங்கள் காண எண்ணிய புது ஆசைகளும் பழுக்காமலே அதற்குப்—பிராப்த மில்லாமலேயே போய் விடுகிறது!

ஃ

புது புது பூஷணங்கள் பூட்டிக்கொள்ள வேண்டுமென்று பூவையருக்கு எவ்வளவோ ஆசை! புருஷனை அதற்குப் படுத்துகிற பாடும், அவன் படுகிற புண்ணும் பிடுங்கலும் சொல்லி முடியாது. ஆசைப்படுகிறதற்குத் தகுந்தபடி செட்டும், சிக்கனமும், மிஞ்சியதையும் சிந்தியதையும் சேர்த்துவைக்கிற புத்தியையும் காணோமே! வீட்டில் கூட்டத்தை வலியச் சேர்த்துக்கொண்டு, போகஇருக்கிறவர்களை

---

தும்மல் வருவதற்கு முன்பே தாங்கள் எழுதியதை ஒருமுடிவில்கொண்டு வந்துவிட அவசரமாய் முயல்கிறார்கள் சிலர். அத்தனை சுறுசுறுப்புபோலும்!

யும் இப்போது என்ன அவசரம் என்று நிறுத்திக்கொண்டு, வீடுநிறைய‌க் கூட்டமும் சந்தடியுமாக்கி வீட்டுக்காரனைக் கடன்காரனுக்கினுல் புது நகைகள் செய்யப் பணம் கூடுவதேது? பூஷணங்கள் பூணுவதும் எது? வெறுங்கழுத்துக்காரியாகத்தான் வெறுத்துக் கழிக்க வைக்கிறது! புதியதிலே போகிற புது ஆசையோடு நல்ல புத்தியும் வேண்டாமா? அந்தப் புத்தியில்லாமல் புது ஆசைகளைக் கிளறிக்கொண்டு என்ன செய்ய?

ஃ

புது வருஷத்திலே பலருக்குப் புது மோகம்! புது வருஷம் புது அதிர்ஷ்டத்தைத் தரும் என்று எவ்வளவோ எண்ணம்! புதுவருஷ முதல் பழய கெட்ட நடத்தைகளை ஒழித்துவிடத் தீர்மானம்! புது வருஷமுதல் ஒழுங்காகக் கணக்கு வைக்க யோசனை! புது டயரியை ஒவ்வொரு நாளும் எழுத நினைக்கிறது! செய்கிற முடிவு போலே கடைசி வரையும் காட்டுகிறதையும் அதற்குத் தகுந்தபடி உழைக்கிறதையும்தான் காணேம்! பழயபடியே சோர்ந்து சோம்பலிலே சாய்ந்துகொள்கிறது! இத்தகையோருக்கு எத்தனை புது வருஷங்கள் புறப்பட்டாலும் புத்தி திருந்தப் போகிறதா?

ஃ

புதிய கடை யொன்று வைக்க ஆவல்! அதில் கோடி லாபம் தேடிக் கொட்டிவிடப் புத்தி! அப்படியே கடை வைத்தும் விடுகிறது! வைத்த கடையிலே தனக்குத் திராசு பிடிக்கத் தெரியாவிட்டாலும், தெரிந்தவன் வேலைக்கிருந்து செய்கிறதைக் கவனித்துத் தேருகிறதில்லை! புது வியாபாரி என்கிற கௌரவத்தில் பெருமை படித்துக்கொள்கிறது! இவன் பராக்காய் பலருடன் பேசி நிற்கிற சமயத்திலெல்லாம், கடையில் வேலைக்கு இருக்கிற அண்ணுத்தை தன் மனிதர்களைக் கடைக்கு வரச்செய்து, நெய் ஒரு வீசையா?—காப்பிக்கொட்டை அரை வீசையா?—பாதம் பருப்பு பத்து பலமா?—என்று வியாபாரம் செய்வதுபோலக் கேட்டுவிட்டுக் கொடுத்தனுப்பிப் பணத்தைப் பெட்டியில் போட்டுவிட்டது போல் காட்டிவிடுகிறுன்! இப்படியே நெடுக வீட்டிற்குப் படியளந்து அனுப்பிவிட்டு, அத்துடன் தினத்துக்கு ஒரு ரூபாயை மடியில் சொருகிக்கொண்டு அதை இரண்டு வருஷத்தில் 730-ரூபாயாக்கி வட்டியும் முதலுமாக ஆயிரத்திற்கு வரச்செய்து, அடுத்தாற்போல் ஒருகடை வைக்கத்துணிந்து விடுகிறுன். இதற்குள் கடை அய்யாவுக்குக் கனத்த நஷ்டம் வந்துவிடுகிறது! அண்ணுத்தையின் சில சங்கதிகளும் தெரிந்து அவனை நீக்கிவிட்டுப் பிறகு சிலநாளில் நஷ்டத்தோடு கடையையும் மூடிவிடுகிறுன்! அதே கடையில் அண்ணுத்தை புதிய கடை வைத்து அவனும் ஒரு முதலாளியாய் விடுகிறுன்! புது ஆசைக்குத் தகுந்தபடி கவனிப்பும் புத்தியும் வேண்டாமா? அது இல்லாமல் ஆசைமட்டுமிருந்தால் கோபுரங்கட்ட முடியுமா?

ஃ

புதுபுது பக்ஷணங்கள் செய்து தின்ன எத்தனையோ ஆசை! வீட்டுக் கூட்டத்திற்கு விருந்திட்ட பிறகல்லவா தனக்கு இரண்டு துண்டுகள் கிடைக்கும். அதற்குத் தாராளப் புத்தியில்லை. அந்த வாயூறுவதும் நிறை

பெரிய மாடிவீடு. மாடிமேல் மாடி. அதனுள் இருப்பதோ ஒரு ஒண்டி மனிதன். அவனுக்குப் பின் அநுபவிக்கவோ மக்களில்லை. மற்றவர்க்கு அது சொந்தமாவதில் என்ன லாபம்!

வேறுகிறதில்லை! புதுமாத சம்பளத்திலே வெகு வெகு எதிர்பார்ப்பு! வந்த சம்பளத்தில் கொஞ்சம் மிச்சம் வைக்கவேண்டு மென்ற கண்டிப்பு இல்லை! வீட்டில் சிக்கனமும் இல்லை! சம்பளம் வந்ததும் பழய கடன்கள் படம் விரித்தாட அதற்கு சமாதானம் செய்துவிட்டுப் புதிய செலவுகளைக் கவனிக்கப்போக முக்கால் மாதத்தில் முழுதும் கரைந்துவிட்டு, மறுபடியும் புதுமாத சம்பளத்துக்கு எதிர்பார்க்க வருகிறது! சம்பளம் வந்ததும் என்னென்னவோ செய்ய—வாங்க—தின்ன—சேர்த்துவைக்க — எவ்வளவோ புது ஆசை! அதற்குத் தகுந்த சிக்கனப் புத்தி யிருந்தாலல்லவோ?

ஃ

பழய சம்பந்த உறவான குண்டு சட்டியிலேயே குதிரை யோட்ட மனமின்றி புதிய சம்பந்தங்கள் செய்து புதிய கௌரவம் தேடிப் பழயவர்கட்குமுன் மீசை முறுக்க ஆசை! ஆசைக்குத் தகுந்த புத்தியும் நிதானிப்பும் ஆராய்ந்து ஆழங்கண்டு அலசிப் பார்க்கிற பொறுப்பையும் தலை கட்டிக்கொள்ள வேண்டாமா? அதிலே ஏமாறிப் போய்விட, வந்த புதிய மருமகளோ தன்னையே வீட்டை விட்டுத் துரத்தும்படியாய் ஆகிவிடுகிறது! தன்னையும் ஒட்டிச்சேராமல், தன் பழய உறவினர்களும் வீட்டிற்குவராதபடி அதற்குத் தகுந்த கத்தரிக்கோலும் வைத்துவிடுகிறாள்! புது இடத்தில் தந்த தன்பெண்ணோ புகலொணு அவதியுற்று மனம் புழுங்குகின்றாள்! கடைசியில், புது இடத்துச் சம்பந்தங்கள் கலகச்சேறும், சண்டை நாற்றமும் மனஸ்தாப முடிச்சுகளுமாய்ப் பெருகி விடும்போது, ஐயோ! தங்கம் போல் என் காலடியில் வீழ்ந்து கிடக்கக்கூடிய பழய இடங்களை உதறி விட்டு இந்தக் குப்பைக் கசுமாலத்தில் கையைவைத்தேனே என்று கண்ணீர் விடவைக்கிறது! புதியாரை நம்பிப் பழையாரைக் கைவிடுகிற சின்னபுத்தியில், புதியார் விரோதிகளாய் முடியப் பழையாரே மறுபடியும் எட்டிப் பார்த்து உதவுவோராகிறார்கள்! புதுப் பானையில் ஈ சேராததுபோல, புது சம்பந்தம் செய்து கொள்வதில் நமது பழயசம்பந்தங்கள் வீட்டிற்குள் வந்து தங்கிப் போக வழியின்றி மூடுண்டு போகிறது! புதியதிலே புகுகிற புத்திக்கு வெகு ஜாக்கிரதையான புது அறிவும் கூடினால் தான் பிழைக்கலாமாக்கும்!—உருப்படலாமாக்கும்!

ஃ

புதிய வஸ்திரங்கள் சேலைகள் தரித்துக்கொள்ள சிலருக்கு நினைவு! அது இரண்டு நாளில் பழய வஸ்திரமாய் விடுகிறது! இவ்விதமே புதுவருஷமும் மறுநாளில் பழய வருஷமாகி விடுகிறது! புதிய மனிதர்களைப் போய் பார்த்துப் பழகிக்கொள்ள சிலருக்கு நினைவு! அதற்குத் தகுந்த வாய்ச்சாலக்கு இருப்பதில்லை! புதிய நண்பர்களைப் பெறச் சிலருக்கு நினைவு! அதற்கேற்ற நட்புக் குணம் கூடுவதில்லை! புதிய தாசி வேசிகள் வீடு காணச் சிலருக்கு நினைவு! பழைய மோஸ்தரைத் தொலைத்துப் புது மோஸ்தராக்கிக் கொள்ள நினைவு! புது விருந்தாளியாய்ப் போய்க் குந்தி மூணுவேளையும் உண்டு வர நினைவு! புதிதாக ஏதாவது தன்னிடம் எவராவது கொண்டுவந்து தரார்களாஎன்று நினைவு! புதிதாகப் பணமூட்டை கட்டிவர அயல் நாடுகளுக்குப் போய்வர நினைவு! வீடுமாறிப் புது வீட்டில் வாடகைக்குப் போக நினைவு! புதி

---

தன் சொந்த புத்தியைக்கொண்டு ஊகித்துத் தானாகவே எந்தஒரு காரியத்தையும் செய்கிறவர்களுக்கு எப்பொழுதுமே ஒரு தனிக் கௌரவ முண்டு.

தாக ஏமாந்த சோணகிரிகள், பணக்கார விதவைகள், மைனர்கள், மகாராஜன்வீட்டுப்பையன், பெண்கள் கிடைக்கமாட்டார்களா என்று நினைவு! புதுமோப்பம் பிடித்துக் குந்திக்கொள்ள சாஸ்வதமாய்ப் புது வீடுகள் எதுவும் அகப்படக் கூடாதா என்று நினைவு! இருப்பதை விற்றுப் புதியதை வாங்க நினைவு! இன்னும் புதுபுது வர்த்தகங்கள் செய்ய நினைவு! புது உத்தியோக உயர்வுகளிலே நினைவு! புதிதாகப் பணம் கடன்தர ஏமாந்த தாசிரிகள் எவராவது அகப்பட மாட்டார்களா என்று நினைவு! ஒடிந்து சாய்ந்து பிரிந்து குட்டிச்சுவரான பழயநேசத்தைப் புதுப்பித்துக் கொள்ள நினைவு! புதிய இடங்களுக்குக் காதற் கடிதங்கள் அனுப்ப நினைவு! புதிய புஸ்தகவகைகள் பார்க்க நினைவு! புதிய சல்லாபங்களிலே நினைவு! புதிதாக வரப்போகிற கண்ணாட்டியின் மீதும், கணவன் மீதும் நினைவு! நினைவு! நினைவு!

ஃ

நினைக்கிற புதிய ஆவலிலே அதனுள் மறைந்துள்ள தீமைகளைக் கவனிக்கிறதில்லை! அவற்றைக் கண்டு விலகி நல்லதைத் தெரிந்து கொள்ளுகிற புத்தியையும் பெறுகிறதில்லை? புதிய தினுசு, புதிய சாமான் என்பதிலே அவைகள் எத்தனை நாளுக்கு நீடித்திருக்குமென்று நினைக்கிற புத்தியே யில்லை! புதியது என்பதிலேயே புத்தியை மயக்கிக்கொண்டு விடுகிறது! இப்படி ஏமாறுகிறவர்களை மயக்கவே பழய சாமான்களைப் புதியதுபோல் பகட்டி வைத்து அந்த வியாபாரங்களும் பல நடக்கின்றன! புது மதத்தில் புகவும் சிலருக்கு ஆசை! அங்கே புகுந்ததும் சொர்க்க உலகம் கண்ட சோக்கு ஆகிவிடலாமென்று எண்ணம்! சேர்ந்த பிறகு தெரிகிறது—தனது பழய கிணற்றைப் போலத்தான் இருக்கிறதென்று! இவர்கள் தாங்கள் இருக்கும் மதத்தின் கருத்துகளை இம்மியாவது அலசிப் பார்த்தவர்களல்ல! புதிய ஆசை வேண்டியது தான், அதற்குத் தகுந்த புத்தியும் ஆராய்ச்சியும் நிதானிப்பும் பொருந்த வேண்டாமா?

ஃ

பழய உத்தியோகஸ்தர் போய் புதியவர் வருவதில் சிலருக்குப் பிரியம்! அந்தப்படி வருகிற புதியவரோ நெருப்பாயிருக்கிறார்! புதிய வண்ணானும் பழயஅம்பட்டனும் தேடவேண்டுமென்பதில், இன்னும் சீக்கிரமாயும் இன்னும் உயர்வாயும் சலவைசெய்து தருகிற வண்ணானைப் பிடிக்க வேண்டுமென்று அர்த்தமாக்கும்! பழய அம்பட்டனையே தேட வேண்டு மென்பதற்கு, பழகி தனக்கு சரிப்பட்டுபோய், தானும் கூச்சமின்றியிருக்கக்கூடிய வகையில் பழயவனையே தேடிக் கொள்ளும்படி கருத்தாக்கும்! புதிய வெள்ளமும் புதிய வாழ்வும் ருசிதானாயினும், அதிலும் தீமைகளில்லாமலில்லை! புதிய வெள்ளம் வந்து பழய வெள்ளத்தைக் கொண்டு போய் விடுவதும் உண்டு. புதுப்பெண் போல் நாணுகிறவர்களெல்லாம் பிறகு நமக்குப் பெரிய எமன்களாக முடிந்து விடலாம்! புதுமாடு புல்லு பெறுவதும் புதுமோக விருப்பங்களும் சில நாளைக்குத்தான்! "புதுப்பெண்ணே, புதுப் பெண்ணே, நெருப்பு எடுத்துவா, உனக்குப் பின்னாலே இருக்கிறது செருப்படி" என்கிற சங்கதியாகத்

---

இவன் அவன் வேலையைப் புகழ்கிறான். அவன் இவன் வேலையைப் புகழ்கிறான். கடைசியில் இருவரும் சேர்ந்துகொண்டு மூன்றாவது மனிதனை ஏமாற்றி மயக்கிவிடுகின்றனர். கடைசியில் செய்த வேலையோ ஒன்றுமில்லை!

தான் புதியதில் வைத்த ஆசையும் முடிகிறது! புதியதிலே புகுகிற புத்தி எப்போதும் முன் அநுபவமும் முதன்மையான எச்சரிக்கையும் பெற்று ஆராய்ந்து அலசிப் பார்த்துப் பிறகு காலெ யிடுமானால் அது நன்மையே செய்யும். உயர்ந்து பெருமை சீர்கள் பெறவும் வைக்கும். அப்படிக்கின்றி எப்படியாவது பெண் கிடைத்துத் தனக்கு ஒரு கல்யாணமானாற் போதுமென்று புதிய பெண்டாட்டிக்கு ஆசைப்படப் போவதில், அவள் பிறகு ஒரு வடபத்ர காளியாக வந்து குடும்பத்தையே கலக்கிக் கோரணிகள் செய்யும்போது ஆ! என்று அலறி வாயைப் பிளப்பதில் என்ன பயன்? புதியது புகுவதிலே எதற்கும் சொந்தப் புத்தியுடன் நீள நினைத்துப் பார்த்துவிட்டே பிறகு மெதுவாகத் தலையசைக்க வேண்டுமென்று விகடனுக்குத் தோன்றுகிறது. உங்களுக்கு இது எப்படித் தோன்றுகிறதோ? ராம்! ராம்! சுபம்! சு! சுவாஹா!!

---

## முகம்மது நபி அவர்களின் வைபவம்:—

சென்ற புரட்டாசி மாத "அமிர்த குணபோதினி" ஸஞ்சிகையில் முகம்மது நபி அவர்களின் ஜனனதின வைபவத்தைப்பற்றி வரைந்த சமயம் நபிகள் பிரானின் ஜீவிய வைபவத்தைக் குறித்தும் பிரசுரிக்க ஆவலுற்றோம். அதனால் பக்தி பூர்வமாக அடுத்த ஸஞ்சிகையிலிருந்தும் நபி பிரானின் வைபவத்தை "ஜநவிநோதிநி" யிலிருந்தெடுத்துத் தொடர்ந்து பதிப்பித்து வந்தோம். அவ்விஷயங்கள் தவறு—சரி என்பதை ஹிந்துவாகிய நாம் உணர்வதற்கில்லை. "ஜநவிநோதிநி" ஒரு உயர்தரப் பத்திரிகை. பழங்காலத்திலும் சரி, இப்போதும் சரி, அப்பத்திரிகையிலுள்ள பல விஷயங்களைத் திரட்டிப் பாட புஸ்தகங்களாக வைத்திருக்கின்றனர். சிறந்த பண்டித மணிகளால் வெகுகாலம் தொடர்ந்து நடத்தப் பெற்ற ஒரு கௌரவமான பத்திரிகை. ஆதலின், அதிற் கண்ட விஷயங்கள் யாவும் உண்மையாகவே இருக்குமென்று மனதார நம்பியே தான் அதினின்றும் எடுத்துப் பிரசுரஞ் செய்தோம். இது உத்தம திருஷ்டியுடனன்றி வேறில்லை.

இப்பொழுது அவ்விஷயங்களிற் சில பகுதிகள் தவறு என்பதாக நமது இஸ்லாமிய அன்பர்களிற் சிலர் நமக்குத்தெரிவிக்கின்றனராதலின், அவ்விதம் நம்பி நாம் அவற்றை எடுத்துப்பிரசுரிக்க நேர்ந்ததற்கு வருந்துவதை இதன் மூலம் மனஸ்பூர்வமாய்த் தெரிவித்துக் கொள்கின்றோம்.

பத்திராசிரியர்.

---

கோவில் அவ்வுலகப் பசிக்கு சாந்தி செய்கிறது. நம் வீடு இவ்வுலகப் பசியை நிவர்த்திக்கிறது. இரண்டிற்கும் மனோ உழைப்பு வேண்டியிருக்கிறது.

---

மானிடனுக்கு ஜெயம் கிடைப்பதால் ஏற்படும் உத்ஸாகத்தைப்போல் வேறொன்றும் உற்சாகம் தருவதில்லை. என்றைக்காவது ஜெயம் கிடைக்குமென்று நம்புகிறவன் எத்தனை தோல்விகளுக்கும் சலிப்பதில்லை.



படிப்பு முடிந்தவுடன் "குள்ளநரி லேகிய"த்தைப் புசித்தால் உலக ஞானத்தில் நன்கு தேறி, கனத்த பணமூட்டையும் கட்டலாமாம்!

ஃ

விகட கோர்ட்டில் வந்த கொசு கடித்த வழக்கில், காயமோ தழும்போ காணப்படாததால் வழக்கு ருசுவாகவில்லையென்று தள்ளப்பட்டு ஸ்ரீமான் கொசுவின் கோர்ட்டுச் செலவையும் வாதி கொடுக்கவேண்டுமென்று தீர்ப்பாயிற்றாம்!

ஃ

கண்மணியனையாள் கண்வளர் க்ஷேத்திரமே இன்ப பூமி. காதற் கிழத்தியின் அருகிலிருப்பதே முக்தியாம். கட்டழகி கடைக்கணித்தாளெனில், அதற்கு உயிரையே தத்தம் செய்யலாமாம்! கற்கண்டோ சீனியோ, சக்கரைப்பாகோ, அமிர்தந் தானோவென்றோ மயங்கக் குதலை மொழியாள் புன்னகை பூத்ததே பூலோக சுவர்க்கமாம்—என்று விகட புராணிகர் விளம்புகிறார்!

ஃ

முறட்டுக்கும், துடுக்குக்கும், மிடுக்குக்கும் முடிவு முதலிலேயே வராதாம். அது முட்டிக்கொண்டு மண்டையுடையுங் காட்சி கடைசியில் தானாம்!

ஃ

அந்தக் காசுமாலை யாரடி போட்டது என்று நீலா தன் தோழி லீலாவைக் கேட்டதற்கு, இந்தப் பயல்களுடைய பெயரெல்லாம் என் ஞாபகத்தில் வைக்க முடிகிறதாவென்று லீலா பதில் சொன்னாளாம்!

ஃ

ஜனவரியில் மாமிசம் புசியாதவர்கள்கூட கேக் புசிக்கிறார்களே, அதில் கோழி முட்டை சேராமல் தயாராகாதே என்றொருவர் கேட்டதற்கு விகடன், தெரிந்து செய்த பாவத்திற்கு அழுது தொலைக்கலாம், அறியாமற் செய்த பாவத்திற்குக் கடவுளைத் துதித்துத் தொலைக்கலாமென்று பதில் சொன்னானாம்!